KALKI 11.7.2004
ரூ.6.00

# கல்கி



காதல் ஒரு தரம் இரண்டு தரம்



"ஸ்டாப் சாமி... ஸ்டாப்!"

ஜெ. செண்டிமெண்ட் பின்னணி விவரங்கள்...

## சச்சின் பகிரங்க அழைக்கை!

# கமகம...
# கதம்பம்





சிம்ரன் இடத்தில்... 17




சச்சின் பகிரங்க அழுகை! 8—11



கல்கி 11.7.2004

வட்டமேஜை

# கொள்ளை கொண்ட வெள்ளை!

✉ குட்டிச்சாமியாரின் பேட்டியைப் படித்தபோது, அவரது குறும்புத்தனம் தெரிந்தது. பிழைத்துக் கொள்வார் என்பதும் புரிந்தது.
மதுரை - 14, சுந்தரி மணாளன்

✉ சேலத்தைக் கலக்கு கின்ற குட்டிச் சாமியாரின் பேட்டியைப் போட்டு கலக்கிப்புட்டீங்களே...
பனையூர்,
செ. சுப்பிரமணியன்

✉ வீரப்பன் பிடிபடுவானா?' என்ற பொதுக் கேள்விக்கு, 'அரசியல் வேண்டாமே!' என்று கூறிய குட்டி சாமியார், 'ரஜினிகாந்த் ஆட்சிக்கு வருவாரா?' என்ற அரசியல் கேள் விக்கு, 'அவரைப் போன்றவர்கள் ஆட்சிக்கு வர வேண்டும் என்பதே நமது விருப்பம்' என்று கூறியிருப்பது, தமாஷான முரண்பாடு!
நெல்லை, புளியரை கணேசன்

✉ கோலிவுட் ஒலிம்பிக்ஸ், செய்திகள் திரிப்பது, செம பியன், படித்து சிரிப்பு அடங்க வெகு நேரமா யிற்று
சிதம்பரம்,
ஸ்ரீவித்யா காளிதாஸ்

✉ 'சதாம் இதுக்கும் மேலே!' செய்திக் கட்டுரை கண்டேன். ஈராக்கிய மக்களுக்கு, அமெரிக்க ராணுவத்தின் சித்ரவதை செய்திகள் மிகப் பெரிய அளவில் பாதிப்பு தராதது ஒரு புறம் இருக்கட்டும். இது போன்ற செய்தி, புகைப்படம் மற்றும் இணைய தளச் செய்திகள் கிட்டத்தட்ட 'லைவ்' நிகழ்ச்சி போல டி.வியில் இடம் பெறுவது மிகச் சாதாரணமாகிவிட்டது. (இதய நோய் உள்ளவர்கள் பார்க்க வேண்டாம் எனும் முன்னறிவிப்பு வேறு!) சிறு வயது நபர்கூட ஏதோ தனக்கு பிடித்த படத்தைப் பார்ப்பது போல இவற்றைப் பார்க்கின்றனர். உளவியல் நிபுணர்களின் கருத்துப்படி, நம்மையே அறியாமல் நமக்குள் அமிழ்ந்துள்ள வக்கிர உணர்வை இது தூசி தட்டி எழுப்பும்.
நாகமலை,
ப.கா. மணிமொழியன்

✉ ஐந்தாம் வகுப்பு வரை அனைவரையும் தேர்ச்சி செய்ய தமிழக அரசு ஆணை பிறப்பித்துள்ளது! இவ் வேளையில், அமரர் கல்கியில் 'ஆரம்ப ஆசிரியர்' கட்டுரை. என்ன தீர்க்கதரிசனம்!

ஈரோடு - 1, ரேவதிப்ரியன்



✉ டாக்டர் சுதா சேஷய்யனின் 'பெருவாழ்வு வாழ்க' மினி கல்கி, புதுமணத் தம்பதிகளுக்கு பரிசளிக்க சிறந்த பகுதி!

திண்டுக்கல் - 1,

எஸ்.எம். முனவர் சுல்தானா

✉ ஏலம் விடப்பட்டது குழந்தை மட்டுமில்லை, தாய்மையின் பெருமையும் கூடத்தான்!

வேலூர் - 6, வே.ந. கதிர்வேல்

✉ 'வெள்ளை ராகம்' சிறுகதை மனத்தைக் கொள்ளை கொண்டது.

திருவாரூர், எஸ். பாலசந்தர்.




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர் :
கி.ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 97

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
செ. ஏக்நாத் ராஜ்
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
22345622, 23, 24
தொலைநகல் :
044 - 22345621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 097.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

வாசகர்களின்
பேனாவுக்கு மரியாதை

## காக்க... காக்க...

'மரம் வளர்ப்போம் மழை பெறுவோம்' என்ற குரல் நாடு முழுவதும் ஒலிக்கிறது. ஆனால் இந்த மின்வாரியக்காரர்கள் மட்டும், வளரும் மரங்களைச் சிதைப்பதையே குறிக்கோளாகக் கொண்டுள்ளனர்.

மின்வாரிய ஊழியர்கள் கிளைகளை, அடி மரத்திலேயே வெட்டுகிறார்கள். மறுபடி அது துளிர்க்கும்போது, மின்கம்பியை நோக்கியே வளரும். மறுபடி வெட்டுகிறார்கள். இப்படியே வெட்டி, அங்கஹீனமாக்கி, பட்டுப்போகவும் செய்துவிடுகிறார்கள்.

## நலம் வாழ...

சருமம் ஆரோக்கியமாக இருக்கணுமா? மலச்சிக்கலிலிருந்து விடுதலை வேண்டுமா? உடல் எடை கூடாமலிருக்க வேண்டுமா? இரத்தம் சுத்தமாக வேண்டுமா? ஒரே ஒரு விஷயம் செய்யுங்கள். ஆரஞ்சு, எலுமிச்சை, பைன் ஆப்பிள், சாத்துக்குடி போன்ற வைட்டமின் சி நிறைந்த பழரசங்களை அடிக்கடி பருகுங்கள்.

- குணவதி, சென்னை - 17

## கிணற்றில் கயிறு!



கிணற்றில் விழுந்த ஒருவன் ஆறு நாட்கள் ஆகியும் உதவி கிடைக்காமல் தவித்தான். ஏழாம் நாள் ஒருவர் இவன் கஷ்டத்தைப் பார்த்து "ஒரு கயிற்றைத் தருகிறேன். அதை இடுப்பில் கட்டிக் கொண்டு மேலே வா" என்றார்.

"ஆறு நாட்கள் அன்ன ஆகாரம் இல்லாமல் இருக்கிறேன். எனக்கு வலு இல்லை" என்றான் அவன்.

"சரி, நீ கயிற்றைக் கெட்டியாகப் பிடித்துக் கொள். நான் உன்னை மேலே இழுக்கிறேன்" என்றார்.

"உனக்கு அவ்வளவு பலம் உள்ளதா?" என்றான் கிணற்றில் கிடந்தவன்.

"எனக்கு பலம் உள்ளது, நீ கயிற்றைப் பிடி" என்றதும். "நான் மேலே வந்தால் உனக்கு ஏதாவது பணம் கொடுக்க வேண்டுமா?" என்றான்.

"வேண்டாம்" என்றார் அவர்.

"அதுசரி, நான் மேலே வந்த பிறகு எனக்கு நீங்கள் செய்த உதவிக்காக நான் உங்கள் அடிமையாக இருக்க வேண்டும் என்று கூறுவீர்களா?" என்று கேட்டான்.



மரத்தின் வளர்ச்சியைப் பாதிக்காமல் மின் ஊழியர்கள் செயல்பட்டு, மழை தரும் மரங்களைக் காக்க வேண்டுகிறோம்.

- என். ரங்கநாயகி, கோவை

## நாலு, அஞ்சு விஷயம்!



## மனநலம் தரும் பெருமான்!



தென் திருப்பதி எனப்படும் குணசீலத்தில். ஸ்ரீ பிரஸன்ன வேங்கடேசப் பெருமாள் நின்ற திருக்கோலத்தில், தம் வலக்கரத்தில் செங்கோலுடனும், அழகிய மார்பில் இலக்குமியையும் தாங்கி, பக்தர்களுக்கு ஸேவை சாதிக்கின்றார்.

இத்தலநாயகனுக்கு, 'மன நலம் காக்கும் பெருமாள்' என்கிற கீர்த்தியும் இருந்து வருகிறது. புகழ் பெற்ற திரைப் படப் பாடகர் திருச்சி லோகநாதன், சிறிது காலம் சித்தப் பிரமையினால் சிரமப்பட்டுக் கொண்டிருந்தபோது, குணசீலம் கோயிலில் வந்து தங்கியிருந்துள்ளார். நாற்பத்தியெட்டு நாட்களுக்குப் பின்னர் அவருக்கு சித்தம் தெளிந்து குணமானது. அதன்பின்னர் அவர் தொடர்ந்து திரைப்படங்களிலும், மேடைகளிலும் பாடி ரசிகர்களை மகிழ்வித்ததாக, அவரது ரசிகர் ஒருவர் நினைவு கூர்ந்தார். வரும் ஜூலை மாதம் 5ம் தேதி இத்திருக்கோயிலில் மகாகும்பாபிஷேகம் நடைபெறுகிறது.

- ஸ்ரீ அரசு, திருச்சி

"இல்லை நான் அப்படியெல்லாம் கூற மாட்டேன் வா" என்றார் உதவிக்கு வந்தவர்.

"அது சரி, எந்தவித எதிர்பார்ப்பும் இல்லாமல் ஒருவன் இன்னொருவனுக்கு உதவி செய்வானோ? நான் வரவில்லை நீ போ" என்று கிணற்றில் விழுந்தவன் கூறினானாம்.

அதே போல்தான் நாமும். நம்மைக் காப்பாற்ற வந்தவர் குரு. அவர் கொடுக்கும் உபதேசம் தான் கயிறு. ஆனால் நமக்கு இருக்கும் சந்தேகப் புத்தியால், குருவிடம் சரணடையாமல் ஏமாந்து போகிறோம். எந்தவித எதிர்பார்ப்பும் இல்லாமல் நம்மைக் கடைத் தேற்றுபவர்தான் குரு. துளியும் சந்தேகம் இல்லாமல், அவரைச் சரணடைய வேண்டும்.

ஸ்ரீ கிருஷ்ணப்ரேமி உபன்யாஸத்திலிருந்து

- ஜி. இந்திரா, பெங்களூர்



# முக்கியக் குறி: முகம்மது அலி

**பெ**ங்களூரில் சிக்கிக் கொண்ட நிஜாமுதீன் என்பவர் கொடுத்த வாக்குமூலம் தான், தமிழக விவகாரங்களுக்குப் பிள்ளையார் சுழி. பிடிபட்ட நிஜாமுதீன். 2001ம் ஆண்டிலேயே இதே போலி முத்திரைத்தாள் விவகாரம் தொடர்பாக தமிழ்நாடு சி.பி.சி.ஐ.டி. போலீசாரால் தாம் கைது செய்யப்பட்டதாகவும், அப்போது தப்பித்துக் கொள்வதற்காக டி.ஐ.ஜி முகமது அலி, ஐ.ஜி. சுமித்வர்மா இருவருக்கும் லட்சக்கணக்கில் லஞ்சம் கொடுத்ததாகவும் வாக்குமூலம் கொடுக்கவும், ஆரம்பமானது முத்திரைத்தாள் மோசடியின் தமிழ்நாட்டு அத்தியாயம்.

அதைத் தொடர்ந்து சென்னை உயர்நீதிமன்றத்தில் ஒரு பொது நல வழக்கு போடப்பட்டது. மாநிலத்தின் பெரிய போலீஸ் அதிகாரிகள் இந்த வழக்கில் சம்பந்தப் பட்டிருப்பதால், இந்த வழக்கை சி.பி.ஐ விசாரிக்க உத்தரவிட வேண்டும் என்று கோரப்பட்டது. விஷயம் சீரியஸாகிப் போவதைப் புரிந்து கொண்ட மாநில அரசு, 'வழக்கை சி.பி.ஐ. விசாரிப்பதில் ஆட்சேபணை ஏதுவுமில்லை' என்று உயர்நீதி மன்றத்தில் சொல்ல, வழக்கு சி.பி.ஐ.க்குக் கை மாறியது.

**வ**ழக்கில் சம்பந்தப்பட்டிருப்பது டி.ஐ.ஜி. முகமது அலி என்பதுதான் முக்கியம். இதனை ஆளும் அ.தி.மு.க., மத்தியில் ஆளும் கூட்டணியில் இடம் பெற்றுள்ள தி.மு.க இரண்டுமே, சொந்த விருப்பு வெறுப்புக்கு ஏற்ப அணுகுகின்றன.

'கலைஞர் கைது' நாடகத்தை வெகு கச்சிதமாக அரங்கேற்றியவர் முகமது அலி என்பதால், அவரை எப்படியாவது காப்பாற்றி விட வேண்டும் என்கிற நோக்கத்துடன் செயல்பட்டுக் கொண்டு இருக்கிறது அ.தி.மு.க. அவருக்கும், போலி முத்திரைத்தாள் மோசடிக்கும் சம்பந்தம் உண்டு என்கிற குற்றச்சாட்டு இருக்கிறபோதே, ஐ.ஜி. பிரமோஷனுக்கு முகமது அலியைச் சிபாரிசு செய்து ஃபைலை அனுப்ப, கவர்னர் அதைத் திருப்பி அனுப்பிவிட்டார் என்கிறது கவர்னர் மாளிகை வட்டாரம்.

கலைஞரையே கைது செய்த முகமது அலியை ஒழித்துக் கட்டாமல் விடுவதில்லை, என்று முனைப்பாக இருக்கிறது தி.மு.க வட்டாரம்.

மோசடி வழக்கிலே இப்படி ஒரு மோசடி!

\- நிருபர்

# அழுத சச்சின், ஆஸ்துமா வேறடன்,

டாக்டர் மது தொட்டாபிள்ளில் எலும்பு முறிவு அறுவை சிகிச்சை நிபுணர் மட்டுமல்ல, ஸ்போர்ட்ஸ் மருத்துவரும் கூட. தமிழ்நாடு கிரிக்கெட் குழுவின் அதிகாரபூர்வமான மருத்துவர். பல கிரிக்கெட் நாயகர்களுடன் பழகும் வாய்ப்பு கிடைத்தவர். அந்தச் சுவையான அனுபவங்களில் சிலவற்றை, கல்கி வாசகர்களுடன் பகிர்ந்து கொள்கிறார்.



* டாக்டர் மது

"சென்னையில் 1999ல் நடைபெற்ற இந்தியா பாகிஸ்தான் போட்டித் தொடரின் போது, ஐந்து நாட்களும் மைதான வளாகத்தில்தான் இருந்தேன். சச்சின் டெண்டுல்கருக்கு அப்போது கடுமையான முதுகுவலி. சமாளித்துக் கொண்டு ஆடினார். "இதற்கு நான் என்ன செய்யட்டும்?" என்று அவ்வப்போது கேட்பார். சில மருந்துகளையும், உடற்பயிற்சிகளையும் பரிந்துரை செய்தேன்.

இந்த இடத்தில் சச்சினின் இயல்பைக் குறிப்பிட வேண்டும். 'சொன்ன பேச்சைக் கேட்கும்' நோயாளி அவர். எந்த மருந்தை அளித்தாலும், முழு நம்பிக்கையுடன் உட்கொள்வார். இந்த விஷயத்தில் இவருக்கு நேரெதிர் ஜவகல் ஸ்ரீநாத். எந்தவொரு மருந்தைப் பரிந்துரைத்தாலும், அது குறித்து குறைந்தது இருபத்தைந்து கேள்விகளாவது கேட்பார். அவ்வளவு சந்தேகங்கள். அந்தக் கேள்விகளில் பெரும்பாலானவை புத்திசாலித்தனமானவையாக இருக்கும்.

மேலே குறிப்பிட்ட போட்டியில், 150க்கும் மேற்பட்ட ரன்களை எடுத்துவிட்டு அவுட்டானார் சச்சின். ஆனால் அவர் பெவிலியனுக்குத் திரும்பிய கொஞ்ச நேரத்திலேயே சடசடவென இந்திய விக்கெட்டுகள் சரிந்தன. நம் அணி தோற்றுவிட்டது.

அப்போது என்னருகே உட்கார்ந்திருந்த சச்சினைப் பார்த்ததும் திடுக்கிட்டேன். தேம்பித் தேம்பி அழுது கொண்டிருந்தார் அவர். ஒருவேளை முதுகுவலி மிக அதிகமாகி விட்டதோ என எண்ணினேன். ஆனால் இந்திய அணி தோற்றதற்காகத்தான் அந்த அழுகை என்பது, என்னைத் திகைக்க வைத்தது. வருந்துவது வேறு, யாராலும் ஆறுதல் கூற முடியாத அளவுக்கு உடைந்து அழுவது வேறு இல்லையா? சுமார் ஒரு மணி நேரம் அழுதபிறகுதான் அன்று இயல்பு நிலைக்குத் திரும்பினார்.

அதே பந்தயத்தின் நடுவே ஒருநாள், எனக்கு வேறுவிதமான அனுபவமும் ஏற்பட்டது. பாகிஸ்தான் ஆட்டக்காரர்களின் அறைக்குள் நுழைந்தேன். அப்போது அங்கு



# இனிப்பான தவிப்பில் வாசிம் அக்ரம்!



கண்ட காட்சி என்னைத் திடுக்கிட வைத்தது. கேப்டன் வாசிம் அக்ரம், சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு ஒரு சிரிஞ்சில் திரவத்தை நிரப்பிக் கொண்டு தன் உடலுக்குள் அதைச் செலுத்திக் கொண்டார். 'அடடா இது ஏதோ போதை மருந்து விஷயம்' என நினைத்தேன். வேகமாக பாகிஸ்தான் அணியின் மருத்துவரை அணுகினேன். "டாக்டர், வாசிம் அக்ரம் ஊசியின் மூலம் உடலில் எதையோ செலுத்திக் கொண்டதைப் பார்த்தேன். இதற்கு என்ன பொருள்?" என்றேன் பதற்றத்துடன். ஜெர்மன் நாட்டைச் சேர்ந்தவரான அந்த மருத்துவர் இதைக் கேட்டு வருத்தத்துடன் சிரித்தார். பிறகு அவர் கூறிய பதில் என்னை இலேசாகத் திகைக்க வைத்தது.




வாசிம் அக்ரம் கடுமையான நீரிழிவு நோய்க்காரர்! இன்சுலின் மருந்தைத்தான் அவர் தம் உடலில் செலுத்திக் கொண்டிருக்கிறார். இப்படி ஒரு நாளைக்கு மூன்று முறை செலுத்திக் கொள்ள வேண்டிய கட்டாயம்.

அதை அறிந்ததும் அவரைச் சந்தித்துப் பேசினேன். "நான்கு வருஷங்களுக்கு முன்னால்தான் எனக்கு சர்க்கரை வியாதி இருப்பது தெரிந்தது. இதை மருத்துவர் கூறினதும் துடித்துப் போனேன். 'இது எப்படி எனக்கு வந்தது? நான் ஒரு விளையாட்டு வீரன். உடல் பருமனானவனும் இல்லை. என் பெற்றோருக்கும் இந்த வியாதி கிடையாது. பின் எப்படி?' என்று தவித்தேன். என் வாழ்க்கையையே இழந்து விட்டதாக

நினைத்தேன். என் மனைவி பிரிட்டனில் பயின்ற மனநல நிபுணர். அவள் பலவிதங் களில் என் மனத்தில் அமைதி உண்டாக் கினாள். அடுத்த மூன்றே வாரங்களில் ரத்தத்திலுள்ள சர்க்கரையை கட்டுக்குள் கொண்டு வந்தேன். சர்க்கரை வியாதிக்கான உடற்பயிற்சிகளை, கிரிக்கெட்டுக்கான உடற்பயிற்சி என எண்ணிக் கொண் டேன், அவ்வளவுதான்" என்றார் புன்னகை யுடன்.

மனத் திண்மைக்கு அவரைவிட ஒரு சிறந்த உதாரணம் இருக்க முடியாது.

ஆஸ்திரேலிய அணியும் இந்திய அணியும் 2001ல் சென்னையில் மோதின. போட்டிக்கு நான்கு நாட்கள் முன்னதாகவே, ஆஸ்திரேலிய அணி சென்னைக்கு வந்து விட்டது. அவர்கள் வந்து சேர்ந்த அடுத்த நாளே எனக்கு ஓர் அழைப்பு. "எங்கள் அணியைச் சேர்ந்த மாத்யூ ஹைடன், உடல் நலமில்லாமல் இருக்கிறார். உடனே தாஜ் ஹோட்டலுக்கு வந்து அவருக்கு சிகிச்சை அளிக்க முடியுமா?"

அப்போது என்னுடன் என் உறவுக்காரச் சிறுவன் ஒருவனும் இருந்தான். எட்டு வயதான அவனையும் அழைத்துக் கொண்டு விரைந்தேன். நான் சென்றிருந்தபோது மாத்யூ ஹைடன் படுக்கையில் படுத்திருந் தார். எழுந்திருக்கவும் முடியவில்லை. பலத்த இருமல், மேல் மூச்சு கீழ்மூச்சு வாங்கிக் கொண்டிருந்தது. காய்ச்சல் வேறு. அவ ருக்குத் தீவிர ஆஸ்துமா என்பது புரிந் தது.

உடனடியாக தாற்காலிக நிவாரணத்துக் குச் சில மருந்துகளை அளித்தபிறகு, இங் குள்ள ஒரு ஃபார்மஸி நிறுவனத்தின் மூலம், சிங்கப்பூரிலிருந்து அந்த மருந்தை வர வழைத்துக் கொடுத்தோம். சுகமடைந்த மாத்யூ ஹைடன் அந்தப் போட்டியில் இரட்டை சதம் அடித்தார்.

அப்போது அறிமுக ஆட்டக்காரரான அவர் பின்னாளில் புகழ் உச்சத்தை அடைந்த பிறகும், என்னை மறக்காமல் தொடர்ந்து ஈ மெயில் போன்றவற்றின் மூலம் தொடர்பு கொண்டு வருகிறார். அது மட்டுமல்ல, என்கூட அழைத்துச் சென்ற பொடியனுடனும் விடாமல் தொடர்பு கொண்டிருக்கிறார். (அவனுக்கும் ஆஸ்துமா உண்டு என்பதையும், இருவரும் அது குறித்து ஹோட்டல் சந்திப்பிலேயே பேசிக் கொண்டனர் என்பதும் குறிப்பிடத்தக்கது) ஒருமுறை ஒரு டீ ஷர்ட்டைக்கூட அன்பளிப் பாக அனுப்பியிருந்தார்.

கிரிக்கெட்டில் மூட நம்பிக்கைகள் நிறைய உண்டு. ட்ரஸ்ஸிங் அறையில் ஆட் டக்காரர்களும் நானுமாக உட்கார்ந்திருக் கும்போது, தங்கள் அணிக்கு நிறைய ரன்கள் ஏறிக் கொண்டிருந்தால், என்னை எழுந் திருக்க விட மாட்டார்கள். "டாக்டர், அப் படியே இருங்க. இல்லேன்னா விக்கெட் விழுந்துடும்" என்பார்கள். ஒருமுறை ஒரு ஆஸ்திரேலிய அணி வீரருக்கு சிகிச்சை அளிக்குமாறு என்னைக் கேட்டுக் கொள்ள, அருகிலிருந்த ராகுல் டிராவிட் "வேணாம். அவர் ஜீரோ ரன்தான் எடுக்கணும்னு நாங்க நினைக்கும்போது நீங்க அவரை சரி செஞ்சா எப்படி.?" என்றார் கிண்டலாக.




வீரேந்திர ஷேவாக் விஷயம் வேறு மாதிரி. அப்போது அவர் ரஞ்சிக் கோப்பை பந்தயத்தில் ஆடு வதற்காகச் சென்னை வந்திருந் தார். பௌன்ஸர் ஒன்று மார்புப் பகுதியில் பட, கடும் வலி. நான் அப்போது மலர் மருத்துவ மனையில் இருந்தேன். "இங்கே அவரை வரச் சொல்லுங்கள்" என்றேன். ஆனால் அவர் வந்த போது, நான் ஒரு குழந்தையின் அறுவைச் சிகிச்சையில் சம்பந் தப்பட்டிருந்தேன். அறுவை சிகிச் சைக்குப் பிறகு தீவிர சிகிச்சைப் பிரி

வுக்கு அந்தக் குழந்தையை அனுப்பி, அவர்கள் பெற்றோர்களிடம் அது குறித்துப் பேசி... என்று நேரம் நிறைய ஆகிவிட்டது. அத்தனை நேரமும் ஷேவாக் காத்திருக்கும்படி நேரிட்டது. காக்க வைத்ததற்காக மன்னிப்பு கேட்டுக் கொண்டேன். அவரது உடல் பிரச்னைக்கு மருந்து, உடற் பயிற்சி, மூச்சு விடும் பயிற்சி ஆகிய ஆலோசனைகளைக் கூற, அவர் திருப்தியோடு சென்றார்.





அதற்குப் பிறகு அவர் இந்திய அணியில் இடம் பெற்று போட்டியில் கலந்து கொள்ள சென்னைக்கு வந்திருந்தார். அப்போது வேகமாக ஓடிவந்து அணியில் உள்ள தம் நண்பர்களிடம் சுட்டிக் காட்டி, "இந்த டாக்டர் என்னை நாலு மணி நேரம் காக்க வைத்தார்" என்றார் மூச்சு வாங்க. எப்படியோ நான் அவரால் மறக்க முடியாத மனிதராகி விட்டேன்.

இந்தியா பாகிஸ்தான் போட்டி ஐந்து வருடங்களுக்கு முன் சென்னையில் நடைபெற்றது. போட்டியின் மூன்றாம் நாள், நான் பாகிஸ்தான் அணியின் தரப்பிலிருந்து அழைக்கப்பட்டேன். அறையில் பாகிஸ்தானிய கிரிக்கெட் வீரர் ஷக்லீன் முஷ்டாக், டாய்லெட்டில் அழுது கொண்டிருந்தார். அழுகைச் சத்தம் வெளியில் கேட்டது. அவரால் சிறுநீர் கழிக்க முடியவில்லை. தவிர சிறுநீர்க் குழாயில் கடும் எரிச்சல். தமது சிறுநீரகங்களில் ஏதோ கோளாறு என நினைத்து அவருக்குப் பெரும் துக்கம். நான் விளக்கிய பிறகுதான் ஓரளவு சமாதானமடைந்தார். வெளிநாடுகளிலிருந்து வருபவர்கள் மட்டுமல்ல, மும்பை, பெங்களூர் போன்ற நகரங்களிலிருந்து வரும் விளையாட்டு வீரர்கள் கூட, சென்னையின் வெப்பத்தினால் இந்த நிலைக்கு ஆளாவதுண்டு. இங்குள்ள வெப்பத்தினால் உடலிலுள்ள நீர்ச்சத்து வியர்வையாக வெளியேறி விடுகிறது. ஆனால் சிறு நீரில் தங்கியுள்ள உப்பு தங்கி, சிறு நீர்ப் பாதையில் கடும் எரிச்சலைத் தருகிறது. இதற்குத் தகுந்த சிகிச்சை அளித்து, இரு மணி நேரத்திற்குப் பிறகு சிக்கலின்றி சிறுநீர் கழித்த பிறகுதான் முஷ்டாக்கின் முகத்தில் சிரிப்பு வந்தது.

இருமுறை அசாருதீனுக்கு சிகிச்சை அளித்திருக்கிறேன். ஒருமுறை அவர் விரலில், அடிபட்டதைத் தொடர்ந்து அந்தப் பகுதியை எக்ஸ்ரே எடுத்துப் பார்த்தேன். என்ன வியப்பு! அத்தனை விரல்களும் கோணல் மாணலாக இருந்தன. தீவிரமாக விளையாட்டில் ஈடுபட்டபோது, அவரது விரல்களில் பலவித எலும்பு முறிவுகள். மீண்டும் சேரும்போது அந்த எலும்புகள் கோணம் மாறிச் சேர்ந்து விட்டதால்தான், அத்தனை விரல்களும் கோணலாகவே எக்ஸ்ரேயில் காட்சி அளித்தன. "இது என் தாய்நாட்டுக்காக நான் அளித்தது" என்றார் பெருமையாக.

ஒருமுறை, மருத்துவப் பரிசோதனைச் சாலைக்கு அவரோடு காரில் சென்றபோது, போக்குவரத்து நெரிசல் காரணமாக சுமார் ஒன்றரை மணி நேரம் சேர்ந்தே இருக்கும்படி நேர்ந்தது. அப்போது தமது இளம் வயதில் இரண்டு மணி நேரம் சைக்கிளை மிதித்து வந்து, மைதானத்தில் கிரிக்கெட் பயிற்சி செய்தது பற்றியும், இந்தக் காலத்துக் குழந்தைகள் உழைப்பின் மேன்மையை அறியாதவர்களாக இருப்பது பற்றியும் பேசினார். எளிமையான, நாணயமான மனிதராக அவர் என் மனத்தில் உயர்ந்தார். ஆனால் மேச்ஸ் ஃபிக்சிங் விவகாரத்தில் அவர் குற்றவாளி என அறிந்தபோது, எனக்கு ஏற்பட்ட அதிர்ச்சி கொஞ்ச நஞ்சமில்லை.

- ஜி.எஸ்.எஸ்.

அட்டைப்படம், படங்கள்:
Crick Info

# கட்சி மாறும் பெண்கள்!

முன்பெல்லாம் வைர நகை வாங்குவது, அடேயப்பா ஆடம்பரம்! ஆனால் இன்று, டைமண்ட் கற்கண்டு வாங்குவது போல, வைரங்களை, சர்வசாதாரணமாக வாங்கிச் செல்கிறார்கள். வைர வியாபாரம் இந்த அளவுக்கு தூள் கிளப்புவதற்கு என்ன காரணம் என்று சூர்யா கோல்ட்ஸ் கிரியேஷன்ஸ் இயக்குநர் ரமேஷ் ஷூரிடம் கேட்டபோது...

"ஸ்விட்ஸர்லாந்து, ஆப்ரிக்கா போன்ற நாடுகளிலிருந்து தாராளமாக இறக்குமதியாகிக் கொண்டிருக்கும் ஸ்வராவ்ஸ்கி, கியூபிக் ஸர்க்கோனியா, ஆல்ப்பினைட்ஸ், மார்க்கஸைட்ஸ் போன்ற வைரமணிக் கற்கள்தாம் இந்தப் பளபள புரட்சிக்குக் காரணம். நீண்ட அறுகோண வடிவில், வில் போன்ற தோற்றம் கொண்ட டயானா கட் சிக்னிடி நகைகள்தாம் லேட்டஸ்ட் ஃபேஷன். தொண்ணூறு டிகிரி பட்டைகளைக் கொண்டு மிகச் சிறந்த முறையில் ஒளியைப் பிரதிபலிக்கும் வெள்ளை, கறுப்பு, இளஞ்சிவப்பு, இளம் மஞ்சள், இளம் பச்சை போன்ற நிறங்களில் சிறந்த டிஸைன்களில் வைர நகைகள் கிடைக்கின்றன" என்றார். நவநாகரிக மங்கையர்கூட்டம், தங்கத்திலிருந்து வைரத்துக்கு கட்சி மாறியதற்கு, இதை விட ஒளி மிகுந்த காரணம் இருக்க முடியுமா?



\- டாலி




## பிரதமர் கருத்து; முதல்வர் மறுப்பு!

'கிராமங்களை கவனிப்போம்' என்று தேர்தல் வாக்குறுதி அளித்த ஐக்கிய முற்போக்குக் கூட்டணி அரசு, சுறுசுறுப்பாகச் செயல்பட்டிருக்கிறது. பஞ்சாயத்து ராஜ் மூலமாக ஏழ்மை ஒழிப்பு, கிராமப்புற வளமாக்கல் குறித்த இரு நாள் கருத்தரங்குக்கு, அனைத்து முதலமைச்சர்களையும் அழைத்துப் பேசியுள்ளார் பிரதமர் மன்மோகன் சிங்.

'பஞ்சாயத்துப் பணிகளுக்காக மத்திய அரசு ஆண்டுதோறும் ஒதுக்குகிற பதினேழாயிரம் கோடி ரூபாயை, மாநில அரசுகள் முறையாகப் பயன்படுத்துகின்றனவா?' என்று கேள்வி எழுப்பியிருக்கும் பிரதமர், மாநில அரசுகள் மூலம் கிராம பஞ்சாயத்துகளைச் சென்றடையும் நிதியை, நேரடியாக பஞ்சாயத்துகளுக்கே மத்திய அரசு வழங்குவது குறித்தும் உரத்த சிந்தனை எழுப்பியுள்ளார்.

மத்திய அரசு பஞ்சாயத்துப் பணிகளுக்கு ஒதுக்கும் நிதி முழுதும், வினியோகிக்கப்படாமலே இருப்பது மிக சகஜமாகிவிட்டது. இதற்கு ஒரு காரணம், பஞ்சாயத்து அல்லது உள்ளாட்சி அமைப்பு உறுப்பினர்களின் அறியாமைதான். அவர்கள் ஓரளவு விஷயம் தெரிந்தவர்களாக இருந்து, தங்கள் நிதித் தொகையைக் கேட்டுப் பெற முயன்றால், அரசின் சிக்கலான நடைமுறைகளும், கிராமத்திலிருந்து நகர்ப்புறத்து அரசு அலுவலகங்களுக்கு நடையாய் நடக்கிற கஷ்டமும் அவர்களை வாட்டுகிறது. மத்திய அரசு ஒதுக்கும் நிதி, இலக்கு மாறி வேறு காரியங்களுக்கு



கல்கி



2004 ஜூலை 11
தாரண ஆனி 27
மலர் : 62
இதழ் : 50

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




உபயோகமாவதையும் பார்க்கிறோம்.

இதையெல்லாம் மீறி நிதி ஒதுக்கப்பெற்றால், 'புல்லுக்கும் பூண்டுக்கும் பொசிந்தது போக' இவர்கள் கையில் வந்து சேரும் தொகை கணிசமாகக் குறைந்திருக்கும்.

இத்தகைய அநீதிகளைத் தவிர்க்கத்தான், நிதியை நேரடியாக பஞ்சாயத்து அமைப்புகளுக்கு வழங்குகிற யோசனையைப் பிரதமர் முன் வைத்திருக்கிறார்.

'இச் செயல் மாநில அரசின் செயல்பாட்டில் தலையிடுகிற அதிகார மீறல்' என்று தமிழக முதல்வர் ஆட்சேபம் தெரிவித்திருக்கிறார்.

நிதி ஒதுக்கீடு செய்யும் மத்திய அரசு, அதை மாநில அரசு மூலம் வினியோகிப்பதில் கூட தவறில்லை. ஆனால், தவணை முறையில் ஒதுக்கீடு செய்து, முதல் தவணை சரியாகப் பயன்படுத்தப்பட்டிருக்கிறதா என்பதை மாநிலத்தில் உள்ள மத்திய அரசு அதிகாரிகள் மற்றும் ஆளுனர் மூலம் கண்டறிந்து, பிறகு அடுத்த தவணையைக் கொடுக்க வேண்டும். முதல் தவணையைச் சரியாகப் பயன்படுத்தாத பட்சத்தில், தானே நேரடியாகச் செயல்படுகிற தார்மிக உரிமையை மத்திய அரசு பெற்றுவிடும்.

உள்ளாட்சி அமைப்புகள் மாநில அரசின் பொறுப்புதான். ஆனால் பொறுப்பு சரியாக உணரப்படாதபோது, உள்ளாட்சி அமைப்புகளுக்கு மத்திய அரசின் நிதி நேரடியாக அனுப்பப்படுவதை அத்துமீறலாகக் கருதி ஆட்சேபிக்க அவசியம் இல்லை.

கட்சிக் கண்ணோட்டம், அரசியல் விரோதம் போன்றவற்றை ஒதுக்கிவிட்டுப் பார்த்தால், பிரதமர் சொன்னதில் அர்த்தம் இருப்பது புரியும்.

உள்ளாட்சித் தேர்தல்கள் நடத்தப்பட்டு, அவை ஆரோக்கியமாகவும் பயனுள்ள வகையிலும் செயல்படுகின்றனவா என்று மாநில அரசுகள் கண்காணிப்பதுதான் முக்கியம்.

'உள்ளாட்சி அமைப்புகளின் செயல்பாடுக்கு இலக்கும் திசையும் நிர்ணயிப்பதில் மத்திய மாநில அரசுகள் கருத்தொருமித்துச் செயல்பட வேண்டும்' என்றும் பிரதமர் தமது ஆவலை வெளிப்படுத்தியுள்ளார். "அவ்வாறு இயங்குவதன் மூலம் எழுபதுகோடி மக்களைக் கொண்ட கிராமப்புறங்களை, எழுபதுகோடி நல்வாய்ப்புகளாக உருமாற்ற முடியும்;




பொருளாதார சீர்திருத்தத்துடன் கிராமப்புற அமைப்புகளின் இயக்கமும் சீர்திருத்தம் கண்டால், கிராமங்கள் தன்னிறைவு அடையும்" என்று பிரதமர் பேசியிருப்பது, அற்புதமான திட்டமாகத்தான் தெரிகிறது. ஆனால், அதைச் செயல்படுத்துவது, எப்படி, என்பதுதான் மிகப் பெரிய கேள்வி.

* மாநில - மத்திய அரசுகளிடையேயான அரசியல் விரோதங்கள், உள்ளாட்சி அமைப்புகளின் வளர்ச்சி வாய்ப்புகளை பாதிக்கின்றன.

* விவசாயம் சார்ந்த தொழில்கள் அமைப்பது பிரதமரின் திட்டத்தில் முக்கிய இடம் பெற்றிருக்கிறது. விவசாயம் சிறப்பதோ, நதிநீர்ப் பங்கீட்டைப் பொறுத்திருக்கிறது!

* பஞ்சாயத்து அமைப்புகளே அரசியல் மயமாகிவிட்டதால், கட்சி அரசியலும் அதன் விளைவான மோதல்களும் வளர்ச்சிப் பணிகளுக்கு முட்டுக்கட்டை போடுகின்றன. 'ஊருக்கு நல்லது செய்ய ஒன்று சேருவோம்' என்பதுபோய், 'யாருக்கு இதிலே என்ன கிடைக்கும்?' என்கிற நோக்கும் போக்கும், எல்லா நிலைகளிலும் ஊடுருவியிருக்கின்றன.

எனவேதான் 'உள்ளாட்சி அமைப்பு தேர்தல்களில் அரசியல் கட்சிக் கண்ணோட்டமே கூடாது' என்ற அறிஞர் அண்ணாவின் கருத்து முக்கியமானதாகிறது. இந்த நிலை உருவானால், அந்தந்த வட்டாரத்தில் உள்ள மக்களின் நன்மதிப்பைப் பெற்ற பிரமுகர்கள் உள்ளாட்சித் தேர்தல்களில் நின்று வெற்றி பெற்று, ஊருக்கு நல்லது செய்து, தாங்களும் நற்பெயர் எடுக்க முன் வருவார்கள்.

அரசு சாரா சேவை அமைப்புகளின் வழிகாட்டலில், கிராமப்புற மக்கள் சிறு குழுக் களாக இயங்கி முன்னேறுவதும் சிறந்த பயன் தரும். தமிழகத்தில் பெண்கள் சுய உதவிக் குழுக்களின் அமைப்பு ரீதியான வெற்றி, வியப்புக்குரியதாக அமைந்திருக்கிறது. இந்த வெற்றியின் ரகசியமே, அரசு தலையீடு இல்லை என்பதுதான்.

மத்திய - மாநில அரசுகள் ஒருமித்த நோக்குடன் பஞ்சாயத்துகளை அணுகுவது எவ்வளவு முக்கியமோ, அவ்வளவு முக்கியம், விலகி நின்று அவற்றை அரசியல் கண்ணோட்டமின்றி இயங்கவிடுவது. ●

ஆசிரியர் பக்கம்

# எங்கள் ஊரில் ஏ.ஸி பள்ளி!

மருத்துவ, பொறியியல் படிப்புக்கான அட்மிஷன் குழப்பங்களுக்கு என்ன காரணம்...? என்ன விலை கொடுத்தாவது குழந்தைகளை டாக்டராக்கி விட வேண்டும், அல்லது இஞ்சினியர் ஆக்கிவிட வேண்டும் என்கிற பெற்றோரின் பேதைமையா? குழந்தைகளின் பேராவலா? சமூக எதிர்பார்ப்பின் வற்புறுத்தலா..? கல்வித் துறை, அரசாங்கத்தின் குளறுபடிகளா...? விடை இவற்றின் நடுவே எங்கோ சிக்கிக் கொண்டிருக்கலாம். அல்லது பின் வரும் சம்பவத்திலும் அடங்கியிருக்கலாம்:

அந்தப் பிரமுகர் ஒரு சிற்றூரின் பெரிய புள்ளி. கரைவேஷ்டிக்காரர். கைகளில் கட்சி சின்னத்துடன் முத்திரை மோதிரம் அணிபவர். அதிகம் படிக்காவிட்டாலும், அரசியலில் ஓர் இன்னிங்ஸ் ஆடி விட்டு, இரண்டாவது இன்னிங்ஸாக இஞ்சினியரிங் கல்லூரி ஆரம்பித்திருந்தார்.

ஒரு சந்திப்பின்போது, தமது கல்லூரிக்கு கல்வி அமைச்சகத்தின் அங்கீகாரம் பெற்றது எப்படி என்பதை விவரித்தார்:

"எல்லா வசதியும் எங்க காலேஜ்ல பண்ணியாச்சு. மண் ரோடே கிடையாது. முழுக்க கான்கிரீட்.... லேப், கம்ப்யூட்டர், அவ்வளவும் லேட்டஸ்ட் வசதிதான்... ஆனா பாருங்க, இன்ஸ்பெக்ஷனுக்கு வந்துட்டு சர்டிஃபிகேட் பண்ணாம போயிட்டாங்க! நான் விடுவேனா... நேரே டெல்லிக்குப் போனேன். மத்திய அமைச்சர் அப்போ எங்க கூட்டணியில் இல்ல.. ஆனாலும் என்ன... நாம சொன்னா கேட்பாரு. சொன்னேன்... புரிஞ்சுக்கிட்டாரு. நம்ம காலேஜுக்கு அங்கீகாரம் கிடைச்சுடுச்சு..."

ஒரு முறைகேட்டைக் குறித்து வெளிப்படையாகப் பேசுவதில் கூச்சமோ, அச்சமோ இன்றிப் பேசினார் அப்பிரமுகர். 'அரசியல் செல்வாக்கு பெருமைக்குரியது; அதனைப் பயன்படுத்துவது தமது அடிப்படை உரிமை' என்கிற தொனி அவர் பேச்சில் கொடி கட்டிப் பறந்தது. 'இதெல்லாம் சகஜம் தானே' இதைக்கூட சாதிக்கத் தெரியாவிட்டால் நாம் எதற்கு லாயக்கு?! என்கிற 'மேலான தெளிவு' தொக்கி நின்றது.

சுயநிதி பொறியியல் கல்லூரித் தலைவரான அவரது அறைக்கு வெளியே, பெற்றோர் பிள்ளைகளைச் சேர்க்கத் தவமிருந்தனர். விலையுயர்ந்த தவம்!

இந்தச் சம்பவத்தின் பாதிப்பிலிருந்து மீள்வதற்கு முன், மீண்டும் அந்தக் கல்லூரித் தலைவரைச் சந்திக்க நேர்ந்தது.

"நல்லாயிருக்கீங்களா...? நம்ம ஊர்ல ஒரு ஸ்கூல் ஆரம்பிக்கப் போறேன்..." என்றார். "எல்லா கிளாஸ் ரூமும் ஏ.ஸி பண்ணி, பணக்காரப் பையன்கள் படிக்கறதுக்கு..."

"இது சரியில்லை... எளிமையும் சமத்துவமும் பயில வேண்டிய பள்ளிப் பருவத்தில், குழந்தைகளை ஆடம்பரத்துக்கு அடிமையாக்கி விடுவீர்கள்..." என்று வாதிட்டபோது, அவருக்குப் புரியவில்லை. "என் பையனை ஏற்காடு மான்ட்ஃபோர்ட் ஸ்கூலுக்கோ, ஊட்டி லவ்டேலுக்கோ அனுப்பினா, என்ட்ரன்ஸ் எழுதச் சொல்றாங்களே...? எழுதினா இடம் கிடைக்காது, தெரியும். அவனை மாதிரி எத்தனை குழந்தைங்க எங்க ஊர்ல...? அவங்க சந்தோஷமா படிக்கத்தான் ஏ.ஸி பள்ளிக்கூடம்" என்றார்.

இன்று கல்வி இத்தகையவர்கள் கையில் இருப்பதே, இந்தியாவின் எதிர்கால அபாயம்.

# உதிக்கிறார் உதித்தா!

'பாப்' இந்திப் படத்தில் நடித்தவர் இந்தப் புதுமுகம் உதித்தா கோஸ்வாமி! படம் டப்பா டான்ஸ் ஆடிவிட்டது என்பதால் உதித்தாவையும் கண்டு கொள்ளவில்லை பாலிவுட்! தற்போது, உதித்தாவின் கடைக்கண் பார்வை வந்தாரை வாழவைக்கும் தமிழகத்தின் மீது திரும்பியிருக்கிறதாம்!

சிம்ரன் இல்லாததால், ராத்தூக்கம் வராமல் அலைந்து கொண்டிருக்கும் தமிழ் ரசிகன் இருக்கானே! வாங்'கோஸ்வாமி' வாங்கோ!

- ஆர்.எல்.

# ஹோமியோ - சித்த - ஆயுர்வேத முக்கூட்டு மருத்துவத்தால் குழந்தை பெறலாம்

திருமணமாகி பல ஆண்டுகளாக குழந்தை பாக்கியம் இல்லாமல் இருந்து வரும் தம்பதியருக்கு திருவண்ணாமலை மாவட்டத்தில் வந்தவாசியில் பிராமணர் தெருவிலும், சென்னை வடபழனியில் 100 அடி சாலையில் டி.எஸ். கௌரிசங்கர் திருமண மண்டபம் எதிரிலும் மருத்துவமனை நடத்திவரும் டாக்டர் ஏ. அர்ஜுனா, டாக்டர் வி.ஏ. ஆண்டாள் தம்பதிகள் ஆணுக்கு அறவே உயிரணு இல்லாதவர்களுக்கு உயிரணு உற்பத்தி செய்தும், உயிரணு உற்பத்தி குறைவாக உள்ளவர்களுக்கு அதை அபிவிருத்தி செய்தும் - மற்றும் பெண்களுக்கு கருப்பையால் உண்டாகும் அனைத்து கோளாறுகளுக்கும் ஹோமியோ-சித்த-ஆயுர்வேத முக்கூட்டு மருத்துவத்தால் ஆண் - பெண் மலட்டுத்தன்மை நீக்கி குழந்தை பிறக்கச் செய்கிறார்கள்.



• உயிரணு உற்பத்தி ஆகியும், கருக்குழாய் அடைப்பு நீங்கியும் 14.2.2003-ல் ஆண் குழந்தை பெற்ற இலங்கையைச் சேர்ந்த மேரி - செபாஸ்டின் தம்பதியர் மருத்துவ திலகம் டாக்டர் A. அர்ஜுனாவுடன் உள்ளார்கள்.

கடந்த 44 ஆண்டுகளாக இந்த டாக்டர் தம்பதிகள் மேற்குறிப்பிட்ட இரண்டு இடங்களிலும் மருத்துவமனை நடத்தி வருகிறார்கள். "மலட்டுத் தம்பதிகளில் பெண்களில் 30 சதவீதம் பேரும், ஆண்களில் 70 சதவீதம் பேரும் குறைபாடு உள்ளவர்களாகவே எங்கள் மருத்துவமனைக்கு வருகிறார்கள்" என்கிறார்கள் டாக்டர் அர்ஜுனா, டாக்டர் ஆண்டாள் அர்ஜுனா.

பெண்களுக்கு மாதவிடாய் பிரச்சினைகளை ஒழுங்குபடுத்தியும், கருப்பை ஓவரிகளை வளர்ச்சியடையச் செய்தும், அதிலுள்ள கட்டிகளை கரைத்தும், கருமுட்டை உற்பத்தி செய்து வெடிக்கச் செய்தும், கருக்குழாய் அடைப்பு நீக்கியும் முக்கூட்டு மருத்துவத்தால் குழந்தை பிறக்கச் செய்கிறார்கள்.

## முக்கூட்டு மருத்துவத்தால் கருக்குழாய் அடைப்பு நீங்கியும், உயிரணு உற்பத்தி ஆகியும் குழந்தை பெற்ற தம்பதியர்!

கும்பகோணம் லதாகுமார் தம்பதியருக்கு உயிரணு உற்பத்தி ஆகியும், கருக்குழாய் அடைப்பு நீங்கியும் ஆண் குழந்தை பெற்றார்கள்.

இராணுவத்தில் பணிபுரியும் ஜெஜலட்சுமி - கிருஷ்ணமூர்த்தி தம்பதியருக்கு (பெரம்பலூர் மாவட்டம் உடையார்பாளையத்தில்) உயிரணு உற்பத்தி ஆகியும், கருக்குழாய் அடைப்பு நீங்கியும் குழந்தை பெற்றுள்ளார்கள்.

கல்கத்தாவில் சுரேஷ் - பரணி தம்பதியருக்கு உயிரணு உற்பத்தி ஆகியும், கருக்குழாய் அடைப்பு நீங்கியும் ஆண் குழந்தை பிறந்துள்ளது.

வேலூர் மாவட்டம் நாட்றாம்பள்ளியில் ரோஜா மலர் - மணி தம்பதியருக்கு (உயிரணு உற்பத்தி ஆகியும், கருக்குழாய் அடைப்பு நீங்கியும்) ஆண் குழந்தை பிறந்துள்ளது. 3.6.2003ல்.

பாண்டிச்சேரியில் சாந்தி - செல்வராஜ் தம்பதியருக்கு உயிரணு உற்பத்தி ஆகியும், கருப்பை பிரச்னை நீங்கி முக்கூட்டு சிகிச்சையால் ஒரு பெண் - இரண்டு ஆண் குழந்தைகள் உள்ளார்கள்.

சென்னை புதுப்பேட்டையில் பஸிரியா -ஜெயலானி தம்பதியருக்கு முக்கூட்டு சிகிச்சையால் தற்போது ஒரு பெண்ணும், பையனும் உள்ளார்கள். மதுரையில் கோபால் - சித்ரா தம்பதியருக்கு பெண் குழந்தை பிறந்துள்ளது.

தஞ்சை ராஜமன்னார்குடியில் நடராஜன் என்பவருக்கு அறவே உயிரணு உற்பத்தி இல்லாமல் இருந்து முக்கூட்டு மருத்துவத்தால் உயிரணு உற்பத்தி ஆகி அவர் மனைவி 11.12.2003ல் ஆண் குழந்தை பெற்றுள்ளார்.

சென்னை வடபழனி குமரன் காலனியைச் சேர்ந்த முருகன் என்பவருக்கு அறவே உயிரணு இல்லாதிருந்து முக்கூட்டு மருந்து சாப்பிட்டு உயிரணு உற்பத்தி ஆகி, புத்திரபாக்கியம் அடைந்துள்ளார்.

திருவாரூர் மாவட்டத்தைச் சேர்ந்த அறிவழகன் என்பவருக்கு அறவே உயிரணு இல்லாதிருந்து முக்கூட்டு மருத்துவத்தால் உயிரணு உற்பத்தி ஆகி புத்திர பாக்கியம் அமைந்திருக்கிறது.

மகாராஷ்டிர மாநிலத்தில் சந்திரசேகரன் என்பவருக்கு உயிரணுவில் 20 மில்லியன் கவுண்ட் இருந்து முக்கூட்டு மருத்துவத்தால் 98 மில்லியன் உயர்ந்து புத்திர பாக்கியம் அடைந்துள்ளார்.

பிரான்ஸ் நாட்டில் வைரவநாதன் - கலாவதி தம்பதியர் புத்திர பாக்கியம் அடைந்துள்ளனர். ஈரோடு மாவட்டம் நசியனூரில் சின்னச்சாமி - சம்பூர்ணம் தம்பதியர் கருக்குழாய் அடைப்பு நீங்கி ஆண் குழந்தை பெற்றுள்ளார்கள்.

லண்டனில் இந்திரேசன் - கலாரஞ்சிதம் தம்பதியருக்கு உயிரணு உற்பத்தி ஆகியும், கருக்குழாய் அடைப்பு நீங்கியும் புத்திர பாக்கியம் அடைந்துள்ளார்கள்.

மதுரை ஜெய்ஹிந்த்புரத்தில் (194, ராஜீவ் காந்தி தெரு, ஜீவா நகர், 1-வது மெயின் வீதி) ஆர். விஜயராஜன் - செல்வி தம்பதியருக்கு முக்கூட்டு மருத்துவ சிகிச்சையால் உயிரணு உற்பத்தி ஆகியும், கருக்குழாய் மற்றும் பல கோளாறுகள் நீங்கியும் 29.10.2002-ல் பெண் குழந்தை பிறந்துள்ளது.

மதுரையில் 23 ஆண்டுகள் குழந்தை இல்லாதிருந்த பாத்திமா சம்சுதீன் தம்பதியருக்கு பெண் குழந்தை பிறந்துள்ளது.

சவுதி அரேபியாவில் சுப்ரமணி - கிருஷ்ணவேணி தம்பதியருக்கு சென்ற மாதம் ஆண் குழந்தை பிறந்துள்ளது- முக்கூட்டு மருத்துவத்தால்.

சென்னை புளியந்தோப்பு ரவிக்கு முக்கூட்டு சிகிச்சையில் உயிரணு உற்பத்தியாகி, புத்திர பாக்கியம் அடைந்துள்ளார். லோகநாதன் (கோவை பெரிய நாயக்கன்பாளையம்) அறவே உயிரணு இல்லாதிருந்து ஒரே மாத சிகிச்சையால் 110 மில்லியன் கவுண்ட், 20% மொட்டிலிட்டி உற்பத்தியாகி அடுத்த மாத சிகிச்சையில் புத்திரபாக்கியம் அடைந்துள்ளார்.

அண்ணா நகர் விஜயகுமார் 6 மாத முக்கூட்டு சிகிச்சையில் கடந்த ஏப்ரல் 2004ல் உயிரணு உற்பத்தி ஆகியுள்ளது. தஞ்சை மாவட்டம் திருவையாறில் ராஜாஜி என்பவருக்கு அறவே உயிரணு இல்லாதிருந்ததற்கு சிகிச்சை அளித்ததில் தற்போது உயிரணு நல்லமுறையில் உற்பத்தி ஆகியுள்ளது. திருநெல்வேலி மகாராஜா என்பவருக்கு அறவே உயிரணு உற்பத்தி இல்லாதிருந்தது. முக்கூட்டு சிகிச்சைகளால் நல்ல முறையில் உயிரணு உற்பத்தியாகி புத்திரபாக்கியம் அடைந்துள்ளார்.

திருவண்ணாமலை மாவட்டம் சாத்தனூர் அணையில் முக்கூட்டு சிகிச்சையால் உயிரணு அதிகரித்து சாமுண்டீஸ்வரி தம்பதி - தற்போது 6 மாத கர்ப்பமாக உள்ளார்.

சென்னை வண்ணாரப்பேட்டையில் ஜோதி - முருகன் தம்பதியர் பல ஆண்டுகாலம் குழந்தை இல்லாதிருந்து முக்கூட்டு சிகிச்சையால் உயிரணு உற்பத்தி ஆகியும், கருக்குழாயில் அடைப்பு நீக்கியும் தற்போது ஜோதி 7 மாத கர்ப்பிணியாக உள்ளார்.

சென்னை மேற்கு மாம்பலத்தில் ரகோத்தமன் என்பவருக்கு முக்கூட்டு கிசிச்சையால் தற்போது உயிரணு உற்பத்தியாகி உள்ளது.



* உயிரணு உற்பத்தி ஆகியும், கருக்குழாய் அடைப்பு நீங்கியும் முக்கூட்டு சிகிச்சையால் 20.8.03-ல் குழந்தை பெற்ற விழுப்புரம் மாவட்டம் செஞ்சியைச் சேர்ந்த முருகன் - தமிழரசி தம்பதியர், டாக்டர் அர்ஜுனாவுடன் உள்ளார்கள்.

எங்கள் மருத்துவமனையில், தமிழ்நாட்டின் எல்லா மாவட்டங்களிலிருந்தும் இந்தியாவின் அனைத்து மாநிலங்களிலிருந்து வந்தும், அயல்நாடுகளில் அமெரிக்கா, இங்கிலாந்து, பிரான்ஸ், கனடா, சுவிட்சர்லாந்து, நியூசிலாந்து, சவுதி அரேபியா, துபாய், குவைத், பக்ரைன், ரியாத், ஓமன், இலங்கை, மலேசியா, சிங்கப்பூர், ஜெர்மனி போன்ற வெளிநாடுகளில் இருந்து வந்தும் சிகிச்சை பெற்று பயனடைந்து வருகிறார்கள்'' என்றார் **டாக்டர் அர்ஜுனா.**



**மருத்துவ திலகம்**
**டாக்டர் A. அர்ஜுனா,**
**டாக்டர் V. A. ஆண்டாள் அர்ஜுனா,**

# நவீன வைத்தியாலயா

**ஹோமியோபதி - சித்தா - ஆயுர்வேத**
**மலடு நீக்கும் ஆஸ்பத்திரி**

**சென்னையில்** சனி, ஞாயிறு, திங்கள் ஆகிய தினங்களில் டாக்டரைச் சந்திக்கும் இடம் : எண் : 65, நெற்குன்றம் பாதை, 100 அடி ரிங் ரோடு, (டி.எஸ். கவுரிசங்கர் திருமண மண்டபம் எதிரில்), வடபழனி, சென்னை - 600 026. போன் : 23623464 STD 044.

செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி ஆகிய தினங்களில் டாக்டரை சந்திக்குமிடம் : நெ. 30, பிராமணர் தெரு, (ஈஸ்வரன் கோயில் அருகில்), **வந்தவாசி,** திருவண்ணாமலை மாவட்டம் - 604 408. போன் : 225208, 226077, 226180 STD 04183.



# ஆடை கட்டி வந்த நிலவோ!

ஊட்டி மலர்க் கண் காட்சியை அப்படியே பெயர்த்துக் கொண்டு வந்து, சென்னை, ஐஸ்வர்யா மஹாலில் வைத்தது போல, அப்படியொரு குளுமை, இளமை, வண்ண விழா! எங்கெங்கு காணினும் தேவதைகள். 'திடும் திடும்' இசை காற்றில் வழிந்தோட, மேடையில் வர்ண விளக்குகளிடையே, ஆர்க்கிட் பூங்கொத்துகள் அழகு நடை போட்டுக் கொண்டிருந்தன. 'நீனாஸ்' பீட்ஸ்' வழங்கிய டிஸைனர் ஷோ!

''ஹேய்! இது வனிதா டிஸைன் செஞ்சது யா.''

'வாவ்!''

தோகை விரிக்காத இளம் மயில் ஒன்று, ஃப்ரெஞ்ச் கவுன் ஒன்றை, குதூகலமாக விசிறி போல பரத்தி, முன்னும் பின்னும் நடக்க, 'ஹோ' என்ற உற்சாகக் கூக்குரல். பேராசிரியை செலீனா, ஷகீலா, விருந்தா, லக்ஷ்மி ஆகியோர்களின் முகத்தில் சந்தோஷப் பெருமை!

அடுத்து ஃப்ளாரல் சூட், ப்ரிண்ட் அண்ட் ப்ளெயின், ஷால் காலர் கௌன், என கண்ணைப் பறிக்கும் ஆடைகளில் மாடலிங் மின்னல்கள் வளைய வந்தபோது, விஸில்களிடையே, காகித அம்புகளும் பறந்தன.

''டிரஸ் எல்லாம் எப்படி? நாங்களே



* இதுதான் லேட்டஸ்ட் ரோப் அண்ட் பீட்ஸ் ஆடை



* வெற்றிக் கூட்டணி

துயாரிச்சது?"

கோரஸாகச் சூழ்ந்து கொண்டனர் நீனாஸ் பாலி டெக்னிக்கில் ஃபாஷன் டிஸைனிங் படிக்கும் மாண விகள்.

"சூப்பர்... அசத்திட் டீங்க" என்று வழிந்ததை ஜொள்ளாக நினைக்காமல், பாராட்டாகவே ஏற்றுக் கொண்டது அடியேன் பாக்கியம்.

"இங்கே சேரும் போது, எனக்கு ஊசியிலே நூல் கோக்க மட்டும்தான் தெரி யும். ஆறே மாசத்துலேயே, நானே டிரஸ் டிஸைன் செஞ்சு முதல் பரிசு வாங்கிற அளவுக்கு, நீனாஸ் பாலிடெக் னிக்கில் பயிற்சி கொடுத்தாங்க" என்று முகம் முழுக்க சந்தோஷச் சிரிப்பாகச் சொன்னார், தன்யா!

சொந்தமாய் பொட்டிக் வைக்கும் திட்டம் கூட இருக் காம்!

"ஃப்ளாரல் ரவுண்டில்' சிறப்புப் பரிசு வாங்கிய வாசுகி, அண்ணாநகர் வாசி.

'டிரஸ் டிஸை னிங், ஃபேஷன்



# அப்போ 70: இப்போ 74!

பாக்சர்ங்கிறதனால அதுக்கான பிராக்டிஸ் பண்ணச் சொன்னார் டைரக்டர். தினமும் மூன்று மணி நேரம் பிராக்டிஸ்... சகட்டுமேனிக்கு சாப்பாடுன்னு ஆனதால போட்ட வெயிட்... மத்தபடி நான்... நானாத்தான் இருக்கேன். கேரக்டரா பார்த்தீங்கன்னா... ஜெயம் படத்துக்கும் எம். குமரனுக்கும் நிறைய வித்தியாசம் இருக்கு! இவனால எல்லாம் பண்ண முடியும்னு காட்டிய படம் ஜெயம். அதை நிரூபிக்கிற முயற்சி எம். குமரன். தவிர...

"'ஜெயம்' படத்தின் ரவிக்கும்... எம். குமரன் ரவிக்கும் என்ன வித்தியாசம்?"

"நாலு கிலோ" என்று கன்னத்தில் குழி விழ சிரிக்கிறார். 'ஜெயம்' படத்தின்போது ரவி 70 கிலோ... இப்போ 74!

"இது கூட நானா விரும்பி ஏத்தினது கிடையாது. கிக்

'ஜெயம்' மாதிரி இருக்குமா, 'காக்க காக்க' மாதிரி இருக்குமான்னு கேட்கக் கூடாது. ஏற்கனவே வந்த படத்தை மறுபடியும் எடுத்தால் யார் பார்ப்பாங்க? அதை நாங்களும் மறந்திட்டோம். நீங்களும் மறந்திடணும்" என்கிறார்.

படம் ஆகஸ்ட் ரிலீஸாம். லேட்டா வந்தாலும் லேட்டஸ்டா இருந்தா சரிதான்...!

-ஸ்ரீ

---

டெக்னாலஜி எல்லாம் மேல் மட்ட பெண்களால்தான் சிறப்பாகச் செய்ய முடியும் என்று நினைத்து, நம்ம ஊர் பெண்கள் தயங்குகிறார்கள். ஆனால் அழகுணர்ச்சியும், நல்ல கற்பனை வளமும் உள்ள யாரும் இதில் இறங்கி ஜெயிக்கலாம் என்பதற்கு நானே உதாரணம்" என்கிறார் வாசுகி. இவருக்கு ஸ்டிச்சிங் யூனிட் வைத்து தொழில் செய்ய ஆசை!

"சமீபகாலமா இளைய தலைமுறை ரொம்ப மாறிவிட்டது. நல்ல வேலை வாய்ப்புகளையும், சொந்தத் தொழில் வைக்க உதவக் கூடிய படிப்புகளையும் மட்டுமே விரும்பிப் படிக்க ஆரம்பித்துள்ளனர். அதுதான் ஃபேஷன் டிசைனிங்குக்கு அத்தனை மவுசு. இங்கே, டெக்ஸ்டைல் டிசைனிங், பிரிண்டிங், டையிங், ஃபேஷன் டிசைனிங் என பல தரப்பட்ட படிப்புகள் களப் பயிற்சியுடன் சொல்லித் தரப்படுகின்றன. என்றார் முதல்வர் ரெஹானா. இது இந்திய அரசாங்கத்தின், தொழில் அமைச்சகத்தைச் சேர்ந்த கிண்டி எஸ்.ஐ.எஸ்.ஐ நிறுவனத்தின் அங்கம்.

சிறப்புப் பரிசு பெற்ற ரோப் அண்ட் பீட்ஸ் உடையில், ஏகப்பட்ட சுவாரசியங்கள்! இந்திய டிசைனர் ருக்மணியே மேடையில் பாராட்டிய ஆடை இது!

"இது என்ன விநோத கலக்கலா இருக்கே?" என்றால்,

"வாழ்க்கையே விநோத கலக்கல் தானே?" என்று பதில் வருகிறது.

- ரோமியோ

படங்கள்: ஸ்ரீஹரி

# வளவளவாக்கம்



"பெண்களைவிட ஆண்கள் கொஞ்சம் அறிவு கூர்மையானவங்க. இதை நீ ஒப்புக் கொள்கிறியா?"

"நிச்சயமா? நீங்க என்னை மனைவியாகத் தேர்ந்தெடுத்திருக்கீங்க. நான் உங்களைக் கணவனா அடைஞ்சிருக்கேனே!"

- தி. சிவசுப்பிரமணியன்



"ரெண்டு மூணு வாரமா என்னோட ஜோக்ஸ் வராததுகூட எனக்கு வருத்தமா இல்லே..."

"வேற எதுல வருத்தம்?"

"'தரமான ஜோக்ஸ் எழுதினா கண்டிப்பா வரும்'னு என் மனைவி எனக்கு ஆறுதல் சொல்றதுதான் தாங்க முடியலை!"

- சீர்காழி வி. ரேவதி



"எங்க அப்பா ஒரு அவசரக் குடுக்கை..!"

"ஏன் அப்படிச் சொல்றே..?"

"டிபன் சாப்பிட்டு முடியறதுக்குள்ளே பெண்ணைப் பிடிக்கலைன்னு சொல்லப் போயி பொண்ணு வீட்டுக்காரங்க ஓட... ஓட... விரட்டிட்டாங்க..!"

- எஸ்.ஏ. கேசவன்



"இந்த ரியல் எஸ்டேட்காரர் வாய் ஓயாம பேசிக்கிட்டேயிருப்பார்."

"அதுக்காக அவர் பிளாட் போட்டுவிக்கிற ஏரியாவுக்கு 'வளவளவாக்கம்'னு பேர் வைக்கணுமா?"

- வசந்தி வள்ளுவன்



# உங்கள் பொன்னான கைகள் புண்ணாகலாமா?

சரியான கோடைக் காலத்தில், மும்பையில், சுமார் முப்பத்தைந்து வயதுள்ள ஒரு பெண்மணி என்னிடம் ஆலோசனை பெறுவதற்காக வந்தார். சென்னைவாசிகளுக்குக் கோடை வெப்பம் என்றால், 37 டிகிரி செல்ஷியஸைத் தாண்டிவிடும் என்று தெரிந்திருக்கும்.

இந்த மும்பை பெண்மணியோ, அந்தக் கோடை உஷ்ணத்தில் கூட, முழங்கை வரை, பருத்தியால் ஆன கிளவுஸ் அணிந்து கொண்டிருந்தார்! அதை நான் கழற்றச் சொன்னபோது, வெகு தயக்கத்துடன் கழற்ற ஆரம்பித்தார். கழற்றிய பிறகுதான் தெரிந்தது, ஏன் அதை அணிந்து கொண்டிருந்தார் என்று. கைகளில் சருமம் உரிந்துபோய் மிக மோசமாக இருந்தன. விரல்களும், உள்ளங்கையும், வெடிப்புகளாகவும், கொப்புளங்களாகவும் இருந்தன. வெடிப்புகளின் பாதையில் இரத்தம் கசிந்துகொண்டு இருந்தது. விரல்களில் இரத்தம் உறைந்து போய்க் கோடிட்டு இருந்தது. முதலில் அவர் கைகளைத் தொடவே அனுமதிக்கவில்லை. தொட்டால் வேதனை! கைகளைத் தொட்டு, விரல்களைப் பிரித்துப் பார்த்தபோதுதான் தெரிந்தது, அவருக்கு வந்திருப்பது மிக மோசமான டிடர்ஜெண்ட் அலர்ஜி, அதாவது சலவைத் தூள் உபயோகித்ததால் உண்டான அலர்ஜி!



ஒவ்வொரு நாளும் ஏதாவது ஒரு வகைப் புதிய சலவைத் தூள், சந்தையில் அறிமுகமாகிக் கொண்டே வருகிறது. வியாபாரப் போட்டி காரணமாக, ஒவ்வொரு நிறுவனமும் அதிக வீரியமுள்ள டிடர்ஜெண்ட் தூளை, குறைந்த விலைக்கு விற்க முனைகின்றனர். எந்த பிராண்ட் பிரமாதமாக வெளுக்கும் என்று இல்லத்தரசிகளுக்கு நிரூபிக்க ஒருவரை ஒருவர் முந்துகின்றனர். வெகு சில கம்பெனிகளே, சருமத்தை டிடர்ஜெண்ட் தூள் எந்த அளவுக்குப் பாதிக்கும் என்று புரிந்து கொண்டிருக்கின்றன.

உபயோகிக்கிறவர்கள் என்ற முறையில் நீங்கள்தான், அது பாதுகாப்பான சலவைத்தூள் என்று

பரிசோதனை செய்யப்பட்டிருக்கிறதா, என்பதை உறுதி செய்து கொள்ள வேண்டும். பல தயாரிப்பாளர் கள், தங்கள் தயாரிப்புகளின் விலையைக் குறைத்து, வாடிக்கையாளர்களை ஈர்க்கப் பார்க்கிறார்கள். ஆனால் அதைச் செய்வதற்காக, தரத்தைக் குறைத்து விடுகிறார்கள். மிகக் குறைந்த விலை வைத்துவிட்டு, 'பிரமாதமாக வெளுக்கும்' என்று சவால் விடுகிற கம்பெனிகளின் தயாரிப்புதான் உங்கள் சருமத்துக்கு அதிக பாதிப்பை உண்டாக்குகிறது.

டிடர்ஜெண்ட் அலர்ஜி என்கிற நிலை எப்போது வருகிறது? உங்கள் சருமம், டிடர்ஜெண்ட் வகைகளில் ஏதாவது ஒன்றை ஏற்க முடியாமல் அவஸ்தைப்படுகிறபோது உருவாவது. எரிச்சலும் நமைச்சலுமாக ஆரம்பித்து, சிவந்துபோய், வெடிப்புகளும், பிறகு சிறுசிறு கொப்புளங்களுமாகக் காட்சி யளிக்கும். நாளடைவில் வெடிப்புகளிலிருந்து இரத்தம் கசியத் தொடங்கும். நேரடியாக டிடர்ஜெண்ட்டுகளுடன் கைகள் புழங்குவதால், உடனடியாக உள்ளங்கையும், விரல்களும் பாதிக்கப்படுகின்றன. சிலர் விஷயத்தில் இது அணிந்து கொள்ளும் ஆடைகள் வழியாக உடல் முழுதும் பரவி விடுகிறது. காரணம், பலர் துணிகளை டிடர்ஜெண்ட்டில் ஊற வைத்துவிடுகிறார்களே ஒழிய, நன்றாகக் கசக்கிப் பிழிவதில்லை. ஒப்புக்குக் கசக்கிவிட்டு அப்படியே விட்டுவிடுவதால், டிடர்ஜெண்ட் முழுவதும் துணியைவிட்டுப் போவதில்லை.

பெண்களைப் பொறுத்தவரை டிடர்ஜெண்ட் அலர்ஜி மிகப் பெரிய பிரச்னை. அதனால் அவர்கள் டிடர்ஜெண்ட் தூளையோ, சோப்பையோ பயன்படுத்தும்போது, கிளவுஸ் அணிவது நல்லது. ஆனால் மளமளவென்று வேகமாக இயங்க வேண்டுமானால் கிளவுஸ் தடையாக இருக்கிறது. இது சர்ஜிகல் கிளவுஸ் வகையைப் பொறுத்தவரை உண்மைதான். இறுக்கமாக இருக்கும்; கழற்றுவதும், போட்டுக் கொள்ளுவதும் சிரமம். ஆனால் இந்தக் காலத்தில் டிஸ்போஸபில் கை உறைகள் கிடைக்கின்றனவே? பெரிய அளவுக் கையுறைகளை வாங்கிக் கொள்ளுங்கள். அதிக விலை இல்லை.


* டாக்டர் முகேஷ் பாத்ரா

டிடர்ஜெண்ட் அலர்ஜி விஷயத்தில் ஹோமியோபதி மருத்துவம் நிறைய பலன் அளித்திருக்கிறது. நோய்க்கு ஆதாரமான காரணம் கண்டறியப்பட்டு அளிக்கப்படும் சிகிச்சைக்கு உடனடி பலன் கிடைத்திருக்கிறது. எரிச்சல், வலி, வெடிப்புகள் எல்லாமே குறைந்திருக்கின்றன. வெடிப்புகள் மறைந்து குணமாகிவிடுகின்றன.

பெட்ரோலியம் 200 (4 மாத்திரைகள், ஒரு நாளைக்கு இருமுறை) எடுத்துக் கொண்டால், வெடிப்புகளில் வலி குறைகிறது. நீர் கசிகிற நிலையில், கிஷியா 6 x (ஒரு நாளைக்கு இருமுறை, இரண்டு மாத்திரைகள்) மிக உதவியாக இருக்கும். இவை உடனடியாக, ஆனால் தற்காலிகமாக, நிவா ரணம் அளிக்கும். இதற்குப் பிறகு ஹோமியோபதி மருத்துவரின் ஆலோ சனையோடு, உங்கள் உடற்கூறுக்கு ஏற்ற மருந்தைச் சாப்பிட்டால், நிரந்தர நிவாரணம் கிடைக்கும்.

சிகிச்சையின்போதும், அதற்குப் பிறகும், டிடர்ஜெண்டைக் கையாளாதீர்கள். சரியானவகை கிளவுஸ் அணிந்துகொண்டு, பிறகு பயன்படுத்தத் துவங்கலாம். வலியிலிருந்து அது உங்களை நிச்சயம் காக்கும்.

தொகுப்பு : **சாருகேசி**
படம் : **ஸ்ரீஹரி**

# அரங்கும் நிகழ்வும்

சமீபத்தில், கவிதை வாசிப்பு நிகழ்வு ஒன்றிற்குச் சென்று திரும்பும் போது, அங்கு வந்திருந்த பார்வையாளர் ஒருவரோடு, பேருந்தில் பக்கத்து இருக்கையில் அமர்ந்து பயணம் செய்யும்படி நேர்ந்து விட்டது.

''கவியரங்கத்துக்கும் கவிதை வாசிப்புக்கும் சம்பந்தமே இல்லிங்களே. கவியரங்கம்ன்னு நினைச்சு தெரியாத்தனமா வந்துட்டேன். அவுங்கள்லாம் நல்லா புரியற மாதிரி ஒரு தடவைக்கு ரெண்டு தடவை படிப்பாங்க. நீங்களும் தமிழ்லதான் படிக்கிறீங்க. ஒரு இழவும் புரியலையே...'' என்று உணர்ச்சிவசப்பட்டு கேட்டார். போன தடவை அவர் சென்றிருந்த கவியரங்கத்தில், மனம் விட்டுச் சிரித்ததாகவும் சொன்னார்.

இரவின் துவக்கத்தில் தொடங்கியிருந்த அந்த தொலைதூரப் பயணத்தில், அவருக்குப் பதில் சொல்ல முயன்றால், தூக்கம் போய்விடுமென்று பட்டது. "இனிமே புரியும்படி எழுதுறன்ங்க..." என்று சொல்லிவிட்டு, வலிய கண்களை மூடிக் கொண்டேன்.

இசை போல, நாட்டியம் போல, நாடகம் போல, கவிதை என்பதும் ஒரு கலை. நாவல் ஒரு கலை வடிவமே இல்லை. நாவல் இறந்து விட்டது என்கிறார், இலக்கியத்திற்காக நோபல் பரிசு பெற்ற வி.எஸ். நெய்ப்பால். எதற்காக இப்படிச் சொல்கிறார் என்று கவனித்தால், நாவல், பத்திரிகைகளுக்காக, வியாபாரத்திற்காக, உருவாக்கப்பட்ட ஒரு வடிவம். அதன் பிரதான நோக்கம், வியாபாரம். கலை சார்ந்தது அல்ல.

எது ஒன்று, முழுக்க முழுக்க வியாபாரத்திற்காகவோ அல்லது வேறு சில மறைமுக, நேரிடையான ஆதாயங்களுக்காகவோ உற்பத்தி செய்யப்படுகிறதோ, அது நுகர்பொருள். ஒரு நுகர்பொருளுக்கும், கலைப் படைப்புக்குமிடையிலான தூரம் மிக அதிகமானது. அதனால்தான் நாவல் இறந்துவிட்டது என்று சொன்ன அதே நெய்ப்பால், கவிதை சந்தேகத்திற்கு இடமில்லாத கலை வடிவம் என்கிறார். நல்ல வேளை, அவர், தமிழ்க் கவியரங்க நாராசங்களைக் கேட்டிருக்க வாய்ப்பில்லை.



மக்களிடையே கவிதையைக் கொண்டு செல்ல, பயன்பட்ட ஒரு வடிவம், கவியரங்குகள். இன்றைய தேதியில், புரிதலற்ற, உள்ளீடற்ற, கேலிக் கூத்தாகி விட்டன இவை. அங்கு எவ்விதத் தீவிர சிந்தனைக்கும் இடமில்லை.

கவிதை வாசிப்பு என்பது, உள்முக விசாரிப்பு. ஆழமான கேள்விகளைத் தூண்டும் துவக்கம். ஒரு நிச்சலன மனோநிலையின் இருப்பு. மொழியின் குழந்தையோடு நிகழும் சம்பாஷணை.

வாழ்வின் நிலையின்மையையும், தகுதியற்ற புகழின் அர்த்தமின்மையையும் உணர்த்தும் தருணம். இப்படி இன்னும் சொல்லலாம்.

கவிதைகளை அரங்கத்தில் வாசிப்பது நம் ஆதி மரபு. கம்பரே, ராமாயணத்தை அப்படித்தான் அரங்கேற்றியிருக்கிறார். எந்த விஞ்ஞான வளர்ச்சியுமில்லா அக்காலத்தில், அது தேவையாகவும் இருந்தது. தொன்மையான மொழிகளான கிரேக்கம், லத்தீனிலும் இப்படி வாசிக்கும் மரபு இருந்துள்ளது. நினைவில் கொள்ள ஏதுவாக, எதுகை, மோனை, சந்தம், சப்த அலங்காரம் எல்லாம் ஏராளமாய் உண்டு நம் பழம் கவிதைகளில். அவை அந்தந்தக் காலத்தின் வெளிப்பாடு.

சந்தங்களையும், சப்த எதுகை மோனைகளையும் துறந்து, உள்ளடக்கத்தில் புதுவித அர்த்த பரிமாணங்களோடு வந்தது நவீன கவிதை. அதற்கு விஞ்ஞானமும் ஒரு காரணம். விஞ்ஞானம் சகல துறைகளிலும் தலைநீட்டி, மாற்றங்களை நிகழ்த்துகிறது.

இவ கிளிகள்
வீட்டிலிருக்கும் கூண்டுக்குள்
வாழப்பழகிவிட்டன.
சில கிளிகள்
வீட்டையே கூடாக்கி
வைத்துவிட்டு
வெளியே சென்று
திரும்புகின்றன.
(மிருகபாஷிகை - வஸந்த் செந்தில்)

அனுபவத்திற்கேற்ப அர்த்தங்களைத் தரும் இதைப் புரிந்து கொள்வதில் பிரச்னைகள் ஏதுமிருக்காது என்று நம்புகிறேன்.

''நடப்பதெல்லாம் கனவு. நம் வாழ்வே ஒரு கனவு. இப்போது நானும் நீங்களும் பேசுவது கூடக் கனவு. ஆனால் யார் காணும் கனவில் நாம்?'' என்று லூயிகரோல் உரைநடையில் எழுப்பிய கேள்வி, கவிதைக்குள்ளும் நீண்டு துளிர்க்கிறது.

இதன் விஸ்தீரண அர்த்த பாவங்களை உணர, மனசை விசாலமாகத் திறந்து வைத்தால் போதும். ஒரு சிறு முயற்சி போதும். கொஞ்சம் ஆர்வம் போதும். மெல்லிய ரசனை போதும். யாருக்குமே புரியக் கூடியவைதான் கவிதைகள்.

-ரவி சுப்ரமணியம்

படம் : செழியன்



# அழகிய

ஸ்ரீ பெரும்புதூருக்கு அருகில் உள்ள பிள்ளைப் பாக்கம் அழகான கிராமம். பெரிது பெரிதான மூன்று தடாகங்கள் தண்ணீரோடு விளங்குகின்ற ஓர் அம்சத்திலேயே அழகு அரசோச்சுகிறது. அக்கம் பக்கத்தில் செல்லியம்மன், பச்சையம்மன் என்று ஏழெட்டு கிராமத் தேவதைகளின் கோவில்கள் உள்ளன. கண்ணப் பெருமாள் பஜனைக் கோவில் கூட இருக்கிறது.

கிழக்கு நோக்கியவாறு அமைந்திருக் கிறது கல்யாண ஜகந்நாதப் பெருமாள் திருக்கோவில். பெருமானின் இடப்புறத் தில் ஆண்டாள், தனி கருவறையில்; வலப்புறத்தில் கல்யாணித் தாயாகு் தனி கருவறையில் அருள்பாலிக்கிறார். எதிரே கூப்பிய கரங்களோடு, கருடன் தம்பத்துக்குப் பின்னால், ஆஞ்சநேய ஸ்வாமி!

மூலவரின் முன்னால் ஸ்ரீதேவி,



# ஜெகந்நாதர்!

பூதேவி சமேதராகப் பெருமாள், கல்யாணித் தாயார், ஆஞ்சநேய ஸ்வாமியின் உற்சவத் திருமேனிகள் வைத்திருக்கிறார்கள்.

ஆதிகேசவப் பெருமாள்தான் இப்போது ஸ்ரீகல்யாண ஜகந்நாதர் ஆகியிருக்கிறார் என்று தோன்றுகிறது.

இப்போதுள்ள மூலவர் திருமேனிகள் ஒரு நூற்றைம்பது, இருநூறு ஆண்டுகளுக்கு உட்பட்டதாய் இருக்கலாம் என்கிறார் இந்தத் திருக்கோயில் திருப்பணியில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டிருக்கிற திருமழிசை புத்தாம் ரங்கநாதச்சார்யார்.

சென்னை வழக்குரைஞர் பி.பி. ராமானுஜத்தின் ஈடுபாட்டால் திருப்பணி வேலைகள் நடந்து, ஊருக்கே புதிய அழகு கூடி உள்ளது.

- சுப்ர. பாலன்

படங்கள் : யோகா

இந்தியா இன்டர்நேஷனல் என்கிற விமானப் போக்கு வரத்து சர்வீஸைத் தொடங்கினான்.

'இந்திய விமான சர்வீஸின் தந்தை' என்று பாசத்துடன் அழைக்கப் பட்ட ஜே.ஆர்.டி. டாட் டாதான் அந்த குட்டிப் பையன் ஜஹாங்கிர். முழுப் பெயர், ஜஹாங்கிர் ரத்தன்ஜி



* மாதவராவ் சிந்தியாவுடன் டாட்டா

# மகாராஜா!

ஜஹாங்கிர் என்ற அந்தச் சிறுவனுக்கு விமானம் ஓட்டக் கற்றுக் கொள்ள வேண்டும் என்று ஆசை. பாரீஸில் அவர்கள் வசித்த வீட்டுக்கு அருகில் தான், லூயிஸ் ப்ளெரியாட் என்கிற விமான ஓட்டி, சொந்த விமானத்துடன் வசித்து வந்தார். ஜஹாங்கிர், அந்த விமானத்தை ஏக்கத் துடன் தொட்டுப் பார்ப்பான். சிறுவனின் விருப்பத்தை அறிந்து கொண்ட லூயிஸ் ப்ளெரியாட், ஒருநாள் தமது விமா னத்தில் ஏற்றிக் கொண்டு பறக்க, ஜஹாங்கிருக்கு சந்தோஷம் தாங்க வில்லை. ஆபத்து நிறைந்த, வித்தியாச மான அனுபவத்தால் கவரப்பட்டவன், "ஸார், நான் வளர்ந்து பெரியவன் ஆனதும் பைலட் ஆவேன்... இதைவிடப் பெரிய விமானத்தை ஓட்டுவேன்" என்று சொன்னான்.

அதே சிறுவன் வளர்ந்து இளைஞன் ஆனதும், இந்தியாவுக்கு வந்து ஏர் தாதாபாய் டாட்டா.

'ஏர் இந்தியா'வின் மகாராஜா சின்னம் உலகப் புகழ் வாய்ந்தது. "ஏர் இந்தியா விமானத்தில் பயணம் செய்பவர்கள் மகாராஜாவைப் போல நடத்தப்படுவர்" என்ற இவரது எண்ணத்தை, மகாராஜா சின்னம் பிரதிபலித்தது.

ஜூலை 29ம் தேதி டாட்டாவின் நூற்றாண்டு விழா கொண்டாடப்பீடு கிறது.

இன்னொரு தகவல்: இன்ஃபோஸிஸ் நாராயணமூர்த்திக்கும், கல்பனா சாவ்லாவுக்கும் ரோல் மாடல் டாட்டா தானாம்.

- கமலநாதன்

*சந்தா கட்டுங்க; சந்தோஷம் அள்ளுங்க!*



# வாழ்க வளமுடன்

# லைஃப் ஸ்டைல் மலர்

- 'கல்கி' பத்திரிகைக்கு ஆண்டுச் சந்தா ரூ.330/- மட்டும் செலுத்துங்கள், ரூ.40/- பெறுமானமுள்ள 'வாழ்க வளமுடன்' லைஃப் ஸ்டைல் மலர் இலவசமாக அனுப்பி வைக்கப்படும்.
- ஏற்கெனவே சந்தாதாரராக இருப்போரும் ரூ.330/- செலுத்தி தங்கள் சந்தாவை நீடித்துக் கொண்டு, 'வாழ்க வளமுடன்' சிறப்பு மலரை இலவசமாகப் பெறலாம்.
- முந்துங்கள்! இந்த அறிவிப்புக்குப் பிறகு வரும் முதல் 500 சந்தாதாரர்களுக்கு மட்டுமே இச்சலுகை!
- **சந்தாதாரர்களுக்கான கடைசித் தேதி: 10.07.2004**

  உங்கள் முழு விலாசத்தைத் தெளிவாக எழுதி, தொகையை DD / MO / காசோலை மூலம் 'KALKI' என்ற பெயருக்கு அனுப்பவும். வெளியூர் காசோலைகளுக்கு ரூ.30/- சேர்த்து அனுப்பவும்.

  **கல்கி லைஃப் ஸ்டைல் மலர் தனிப்பிரதியாகவும் கிடைக்கும்.**

  **விலை ரூ. 40/- கூரியரில் பெற ரூ. 60/- அனுப்புங்கள்.**

---

*முகவரி:*

சர்குலேஷன் மானேஜர்,

கல்கி காரியாலயம்

47, NP, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காட்டுதாங்கல், சென்னை - 600 097

## போஸ்ட் கார்டு கதை

ஒன்பது வருடங்கள் கழித்து நிகழும் சந்திப்பு! முதல் சந்திப்பைப் போலவே இதுவும் இருவரையும் பரவசத்தில் ஆழ்த்தியது. கோவை எக்ஸ்பிரஸில் அவன் மனைவி குழந்தைகளுடன், இவள் கணவன் குழந்தைகளுடன்.

வேலை நிமித்தம் இருவரும் சந்தித்தார்கள், பழகினார்கள், காதலித்தார்கள், பிரிந்தார்கள். நினைவுகளைத் தவிர வேறு மீதமில்லை.

அறிமுகங்கள் முடிந்தன.

"ஈரோட்டுலேதான் இருக்கீங்களா?"

"காலேஜிலதான் வேலையா?"

இதே ரீதியில் விசாரிப்புகள்.

இருவர் மனத்திலும் ஒரே கேள்வி! "இன்னும் உன் மனத்தில் நான் இருக்கிறேனா?" கடைசிவரை இருவராலும் கேட்க முடியவில்லை. சென்னை நெருங்கிவிட்டது!

"உங்க அட்ரஸ், ஃபோன் நம்பர் குடுங்க' அவன் பாக்கெட்டிலிருந்து பேனாவையும் விசிட்டிங் கார்டையும் எடுத்தான். அந்தப் பேனா? - அவள் அவனுக்குத் தந்த ஒரே பரிசு!

அவள் கைப்பையிலிருந்து பர்ஸை எடுத்தாள் - அது, அவன் அவளுக்குப் பிறந்த நாள் பரிசாகத் தந்தது. இருவர் விழிகளும் சந்தித்தன. கேட்காத கேள்வியும், சொல்லாத பதிலும் இருவருக்கு மட்டும் புரிந்தது! மனது நெகிழ்ந்தது!

–சரயு





# பொய் சொல்ல இந்த மூளைக்குத் தெரியவில்லை!

புளுகில் பல தினுசு. அண்டப் புளுகு, ஆகாசப் புளுகு, பச்சைப் புளுகு, அப்படின்னு ஓராயிரம் தினுசு! ஒரு சிலர் புளுகு மூட்டைகளாகவே பிறந்திருப்பார்கள். போலீஸிடம் செம அடி உதை வாங்கினாலும், வாய் திறக்காத கிரிமினல்கள் உண்டு. ஆனால் பெங்களூரிலிருக்கும் டாக்டர் மாலினி சுப்ரமண்யத்திடம் மட்டும் உண்மையை அப்படியே மந்திரித்தாற்போல் ஒப்பித்து விடுவார்கள். யாரிந்த மாலினி? ஹரிச்சந்திரனுக்கு ஒட்டா, உறவா? இரண்டுமில்லை.

பெங்களூர் ஃபோரன்ஸிக் சயின்ஸ் லேபாரெட்டரியின் துணை இயக்குனர். இந்தியாவிலேயே பாலிகிராஃப், பிரெயின் மேப்பிங் மற்றும் நார்கோ அனாலிஸிஸ் போன்ற டெஸ்டுகள் இங்குதான் நடத்தப்படுகின்றன. இதை நாட்டுக்கு அறிமுகப்படுத்திய பெருமை மாலினியையும், இயக்குனர் மோகனையுமே சேரும்.

“ஒருத்தர் எத்தனை வேண்டுமானாலும் பொய் பேசலாம். உறவினர், போலீஸ், கோர்ட் என எல்லோரையும் ஏய்க்கலாம். ஆனால் எங்களிடம் முடியாது. பாலிகிராஃப் டெஸ்டில் சுலபமாகக் கண்டுபிடித்து விடலாம். நாடித்துடிப்பு, சுவாசம், இரத்த அழுத்தம், உடல் நடுக்கம் இவை காட்டிக் கொடுத்துவிடும். குற்றம் சுமத்தப்பட்டவரை, ‘சப்ஜக்ட்’ என்போம். முதலில் அவரது சம்மதம் வேண்டும். ஏற்கெனவே எங்களால் தயார் செய்யப்பட்டிக்கும் கேள்விகளுக்கெல்லாம், ஆம் அல்லது இல்லை, என்று மட்டுமே பதில் சொல்ல வேண்டும். மூன்று வித சென்ஸர்களை அவருடைய உடலுடன் இணைப்போம். நியூமோ கிராஃப் (சுவாசம்), ஜிஎஸ்.ஆர். (உடல் சருமத்தில் மாற்றம்) மற்றும் கார்டியோகிராஃப் (ரத்தத்தின் வால்யூம், பல்ஸ், ரத்த அழுத்தம்). பொய் சொல்ல ஆரம்பித்தாலே 300 மில்லி செகண்டுக்குள் மாற்றங்கள் தெரியும். கம்ப்யூட்டர் க்ராஃப், வெளிச்சம் போட்டு விடும். இதற்கு அடுத்த நிலை, ப்ரெயின் மேப்பிங் டெஸ்ட். இதில் நியூரோன்ஸ்கான் மூலமாக துல்லியமாகக் கண்டுபிடித்து விடலாம்...” விவரிக்கிறார் மாலினி.

* டாக்டர் மாலினி



போலீஸின் அடி உதை ரணங்கள் எல்லோருக்குமே தெரிந்ததுதான். அதிலும்

'தேர்ட் டிகிரி டார்ச்சர்' என்பது மிகக் கொடூரம்.

''உண்மையை வரவழைப்பதற்காக இப்படி அடிச்சு நொறுக்கணுமா? வேறு முறையிலும் அணுகலாமே. நார்கோ அனாலிஸிஸ் டெஸ்ட் பண்ணுவதற்கு, முதலில் கோர்ட்டில் அனுமதி பெற வேண்டும். அரசு மருத்துவமனையில் கை தேர்ந்த அனஸ்தெடிஸ்ட் முன்னிலையில் இது நடத்தப்படும். 'ட்ருத் சீரம்' எனப்படும் சோடியம் பென்டதால் மருந்து ஏற்றப்படும். மெல்ல மெல்ல உறக்க நிலை ஏற்பட்டு, ஹிப்னாடிஸ நிலையில் ஒளிவு மறைவுமில்லாமல், உண்மையை ஒப்பித்து விடுவார்கள்.



அவர்களுக்கே தெரியாது. நாங்கள் வீடியோ ரிக்கார்டிங் எடுத்து, பிறகு காண்பிப்போம். இந்த மருந்தினால் எந்த பக்க விளையும் கிடையாது. பல ஆபரேஷன்களில் உபயோகப்படுத்தப்படும் மருந்துதான் அது...'' தெளிவுபடுத்துகிறார்.

முத்திரைத் தாள் மோசடியில் தனி முத்திரை பதித்திருக்கும் தெல்கி (கரீம் லாலா) மகாராஷ்டிராவிலிருந்து பெங்களூருக்கு பிரெயின் மேப்பிங் மற்றும் நார்கோ அனாலிஸிஸ் சோதனைக்காக வரவழைக்கப்பட்டார்.

"தெல்கி ரொம்பக் கூலாக இருந்தார். நன்றாக ஒத்துழைத்தார். இந்த டெஸ்ட் பற்றிய எல்லா விவரங்களையும் சொன்னோம். நார்கோ அனாலிஸிஸில் அவர் கூறிய விவரங்களையும், சொன்ன பெயர்களையும் கேட்டு அசந்து போனோம். "நான் ஒரு கருவி மாத்திரமே" என்றார். மேற்கொண்டு இது பற்றி விவரமாகச் சொல்ல இயலாது.'' என்கிற மாலினி, தெல்கி கேஸ் பிரெயின் மேப்பிங்கில் ஒரு மைல் கல் என்கிறார்.

வீரப்பனைப் பிடிக்க முடியவில்லை. ஆனால் அவனுக்கு உதவிக் கொண்டிருந்த கனகராஜ் என்பவனுக்கு இந்த சோதனை நடத்தப்பட்டு, அவன் கக்கிய விவரங்களைக் கேட்டு அதிர்ந்து போனதாம் காவல்துறை. கனகராஜ் தற்போது சிறையில். குற்றவாளிகள் மட்டுமல்லாது சமயத்தில் போலீஸுக்கும் பிரெயின் மேப்பிங் டெஸ்ட் நடத்தப்படுகிறது. "போலீஸ் லாக்கப்பில் மரணம், சிறையில் குற்றவாளியின் மரணம் சந்தேகத்துக்குரியதாக இருந்தாலும், போலீஸையும் விடுவதில்லை" என்கிறார் மாலினி!

## அற்புத ஆசி!

சமீபத்தில் வாடிகனுக்குச் சென்று, போப் ஆண்டவரைச் சந்தித்து ஆசி பெற்றிருக்கிறார் பேராயர் எஸ்றா சற்குணம். "புராட்டஸ்டண்ட் கிறிஸ்தவர்கள், போப் ஆண்டவரிடம் மண்டியிட்டு ஆசி பெறுவதில்லை. ஆனால் நான் அந்தப் புனிதரின் ஆசி பெற வேண்டும் என்ற உந்துதலில், மண்டியிட்டு, அவரது மோதிரத்தை முத்தமிட்டேன். போப் ஆண்டவர் என் தலையில் கை வைத்து, நெற்றியில் சிலுவைக் குறியிட்டார். அப்போது தேவனின் வல்லமை என்னைத் தாக்கியது போல உணர்ந்தேன்" என்று நெகிழ்ந்தார் பேராயர்.

இந்தச் சந்திப்பின்போது, புனித தோமையர் திருஉருவச்சிலையையும், சில தமிழ்ப் புத்தகங்களையும், ஆண்டவருக்குப் பரிசாகக் கொடுத்திருக்கிறார் பேராயர்.

- ஐஸ்

மாலினி வாங்கிய விருதுகளில் 'எக்ஸலன்ஸ் இன் ஃபேர்மன்ஸ்' மற்றும் 'உமன் இன் வொகேஷன்' விருதுகள் குறிப்பிட வேண்டியவை. க்ளினிகல் சைக்காலஜியில் ஆய்வு செய்திருக்கும் மாலினி குடிப்பழக்கத்தால் சீரழிந்து போனவர்களின் வாழ்க்கையைச் சீராக்கும் பணியிலும் ஈடுபட்டிருக்கிறாராம்.

- லதா சேகர்

கண்ணாடிக் கல்வெட்டுகள்-5

# யாருமில்லாத கோட்டை



காற்று எழுவகைப் படும்.
வடிவம் ஒன்று,
பெயர்கள் வேறு!

கொண்டல் - தென்றல் -
மந்தமாருதம் - புயல் -
கோடை - வாடை
சூறாவளி!

பனி விழும் இரவை
பத்திரப்படுத்துவது கொண்டல்காற்று
இளந்தோளில் அசைந்து
இதயத்தில் இறங்குவது தென்றல்காற்று!
சுடு மூச்சு சுமந்து
தகதகத்து வருவது கோடைக் காற்று!

குளிர் இழைத்து
குளுகுளுப்பாய் மிதப்பது வாடைக்காற்று!
மனம் கிறங்கும் சுகந்தம்
மடியேந்தி வருவது
மந்த மாருதக் காற்று
கடல் கொண்ட பகுதியில்
சுருக்கொண்டு வருவது
புயல்காற்று!
சுழன்று சுழன்று பொருள்
சூறையாடிச் செல்வது
சூறாவளிக் காற்று!

மேலைநாகையின்
யாருமில்லாத கோட்டையில்
தஞ்சம் புகுந்த பாரதி அப்போது
கோடைக் காற்று!

அவன் உயிர் முழுக்க
பாலைவனப் படுகைதான்

## பா.விஜய்

பந்தல் போட்டிருந்தது

இந்தியாவிற்காக குரல்தந்த
குரல்வளையைக் கைது செய்ய
ஆங்கிலேய தர்பார்
ஆணையிட்டதும்
பாரதி பறந்தான் பாண்டிச்சேரிக்கு...

போகும் வழியில்தான்
பொந்துக்குள் நுழைந்தது அந்தப்
புலி!

தமிழ்பேசியதற்காக
தமிழ்நாட்டில் வாழ முடியாத
தமிழனா?

சிவந்து தணிந்தது அவன்
நெஞ்சு!
அவன் புருவங்களும் துடித்தது
மீசையாய்...

கட்டறுந்த கப்பலாய்
அவன் கால்கள் காடுகளெங்கும்
நகருலா சென்றன!

ஆடுமேய்க்கும் சிறுவர்களோடு
அஞ்ஞான வாசம் இருந்தான்,
அந்த மெய்ஞான வாசி!

''யாரோ ஓர் ஆள்! - அந்த
பாழடைந்த கோட்டையில் பதுங்கி
இருக்கானாமே!''

''நடுராத்திரியில சுத்துறானாம்
பில்லி சூனியம் பண்ணுறானாம்''

''கல்மண்ண தின்னுவானாம்
காளிகோயிலுக்கும் வருவானாம்''

''ஒரு வேள அவன் ஏதும்
தீவிர வாதியோ?''

''வெள்ளைக்கார சர்க்கார்
வெரட்டுதாமில்ல''

"ஆடுமேய்க்கிற பசங்க
அம்புட்டுப் பேரும்
கெட்டுப்புட்டாய்ங்களே"

ஊருக்குள் பதிவானது
பாரதியின் வருகை!

வந்திருப்பவன் - ஓர்
உலகமகா கவிஞரென்று
உணராத ஊர், உலை வளர்த்தது!

பாரதி என்ற அடைமழை
காளான்களின் கர்ஜனைக்கெல்லாம்
கலவரப்படும் மழையல்லவே!



அது காடெங்கும் கோட்டையெங்கும்
கோலோச்சியது!

ஆடுமேய்க்கும் சிறுவர்கள்
தடைசெய்யப் பட்டார்கள்
நடுநிசியில் பாரதியின்
கவியரங்கம் கேட்டு...
கோட்டைக்குள் பேய் புகுந்ததாய்
குண்டு வைத்தனர் மக்கள்!

பாரதியின் விழிகள்
பட்டாம்பூச்சிகள் வராத
மல்லிகைக் காடாய் மங்கியது!

வெள்ளைக்காரனின் கோர்ட்
பாரதிக்கு விலங்கிடும் ஆணையை
பிறப்பித்த பின்...
குடும்பத்தை தாய்வீட்டுக்கு அனுப்பி
பாண்டிச்சேரிக்குப் பறந்த பாரதி
இப்போது மேலை நாகையில்...

காவல் துறையின் கண்களுக்குள்
மிளகாய்ப் பொடி தூவிய
மீசைக்காரன்
இந்தக் கோட்டைக்குள் குடியேறி
மாதங்கள் இரண்டானது!

அதே போது
ஆடு மேய்ப்பவர்களின் அடிச்சுவடிகள்
அற்றுப்போன அக்கோட்டை
ஒரு விரக்தியின் மண்டபமாகவே
காட்சியளித்தது.

பாரதி
புதிய முடிவெடுத்தான்
ஊருக்குள் செல்வது என்று!

கவிதை சமைத்து
கவிதை சமைத்து
தமிழ் புசித்து வந்தாலும்
வயிறு சிறுத்தது!

ஊரில் ஒதுங்கி இருந்த
ஒரு கடைக்குச் சென்றான்
கம்புமாவு வாங்கினான்
கட்டிவெல்லம் கலந்தான்
நீர் விட்டுப் பிசைந்தான்

சத்தான மாவுணவு உண்டான்
போகும் வழியே அவனை
ஆடு மேய்ப்பவர்கள் அறிந்தனர்!

ஏதோ ஒரு
மன்னார்குடி ஜமீன்தாராய்
மமதை கசியப் பார்த்தபடி
ஊருக்குள் உலாவந்தான்!

ஆங்கே இருந்த ஒரு
தண்ணீர்ப் பந்தலுக்குள்
தாகத்தோடு புகுந்தான்!

(பாரதி வருவான்)

# ஒரு நாள் இடத்து

குடிசைகள் அதிகம் இருக்கும் அந்தச் சேரிப் பக்கம் எங்கள் கார் போய் நின்றது.

நானும், எனது மனைவியும், மகனும் காரை விட்டு இறங்கினோம்.

காரைக் கண்டதும் 'ஹோ' என்ற இரைச்சலுடன் சிறுவர், சிறுமிகள் ஓடி வந்தனர்.

என் மனைவி கைப்பையை நீட்ட, அதிலிருந்த சாக்லேட்டுகளை எடுத்து, என் மகன் ஓடி வந்த குழந்தைகளுக்குக் கொடுத்தான்.

சந்தோஷக் கூச்சலுடன் சாக்லேட்டுகளை வாங்கிக் கொண்ட சிறுவர்களையும், என் மகனையும் மாறி, மாறிப் பார்த்தேன்.

என் மகன் சூர்யாவுக்கும் இவர்கள் வயதுதான் ஆகிறது. கான்வென்ட் பள்ளியில் முதல் வகுப்பு படிக்கிறான்.

நாளை அவனுக்குப் பிறந்த நாள். இவனது மூன்றாவது பிறந்த நாளைக் கொண்டாடும் போதுதான், எனக்கு இந்த யோசனை வந்தது.

இவன் பிறந்த நாளைக்கு முதல் நாள், இதே போன்று குடிசைகள் நிறைந்த சேரிப் பக்கம் போக வேண்டியது. என் மகனுக்குப் பிடித்த ஏதாவது ஒரு சிறுவனையோ, சிறுமியையோ அங்கிருந்து வீட்டுக்கு அழைத்துச் செல்வது. ஒரு நாள் முழுவதும் அந்தக் குழந்தையையும் எங்கள் மகனைப் போலப் பார்த்துக் கொள்வது.

அந்தச் சேரிக் குழந்தையை நன்கு குளிப்பாட்டி, புது உடை உடுத்தி, நல்ல சாப்பாடு போட்டு, எங்கள் மகனுடன் விளையாட வைத்து, தூங்க வைத்துக் கொள்வது. ஒருநாள் முடிந்ததும் அந்த ஒருநாள் விருந்தாளியை, அவன் இடத்திலேயே கொண்டு போய் விட்டு விடுவோம்.

என் மகன் ஒரு சிறுவனைச் சுட்டிக் காட்டினான். அவனை அருகில் அழைத்தேன்.

''தம்பி, உன் பெயர் என்னப்பா?''

எனது உடையையும், காரையும் பார்த்து அருகில் வரத் தயங்கினான். தூரத்திலிருந்தே சொன்னான்.

"சண்முகம் என் பேரு"

நானே அவன் அருகில் சென்று, அவன் தோள் மீது கை வைத்தேன்.

"சூர்யா இங்கே வா"

சூர்யா அவன் அருகில் வந்து அவன் கையைப் பற்றிக் குலுக்கினான்.

"எங்க வீட்டுக்கு வரியா சண்முகம்?"

சூர்யாவின் கேள்விக்கு மிரட்சியுடன் பார்த்தான். அவனின் குண்டுக் கண்கள் பளபளத்தன.

கறுப்பாயிருந்தாலும் சண்முகத்தின் முகம் களையாயிருந்தது.

"உங்க வீட்டுக்கு எங்களைக் கூட்டிட்டுப் போறியா?"

பலமாய்த் தலையாட்டினான். அவன் முன்னே நடக்க, பின்தொடர்ந்தோம்.

ஐந்து நிமிட நடையில், ஒரு சாக்கடை, பன்றி, குலைத்த நாய், ஈ மொய்த்த பலகாரக் கடை எல்லாவற்றையும் தாண்டி அவன் குடிசைக்குச் சென்றோம்.

"அம்மா..." என்று கத்தியபடி உள்ளே ஓடினான் சண்முகம்.

சாணி பூசிய கெட்டிப்பட்ட மண் தரை, தூளியில் குழந்தை, பம்ப் ஸ்டவ், பழைய பாய்கள், கொடியில் அழுக்குத் துணிமணிகள் என்று குடிசையின் உள்ளே ஏழ்மை படமாய் விரிந்தது.

"இது என் அம்மா, இது தாத்தா! என் அப்பா வெளியே போயிருக்காரு" என்று

பெரிய மனிதத் தோரணை யில் அறிமுகப்படுத்தினான் சண்முகம்.

"தூளியிலே இருக்கிறது என் தங்கச்சிப் பாப்பா'' என்று சொன்ன போது, அவன் குரலில்

கிருஷ்ணா



பெருமை நிறைந்திருந்தது.

எங்களை அறிமுகப்படுத்திக் கொண்டோம். வந்த விவரத்தைச் சொன்னோம். அவன் அம்மா விரித்த பாயில் அமர்ந்தோம். சண்முகத்தையும் எங்கள் அருகில் அமரச் சொன்னோம். கூச்சத்துடனும், வெட்கத்துடனும் அமர்ந்தான்.

"கவலையேபடாதீங்க. நானே திரும்பக் கொண்டு வந்து விட்டுடறேன் சண்முகத்தை."

எங்கள் மேல் சந்தேகம் ஏதும் வந்து விடக் கூடாது என்று, நிதானமாக விளக்கினேன்.

சண்முகத்தின் அம்மாவுக்கு ஓரே சந்தோஷம் என்பது அவள் முகத்திலிருந்து தெரிந்தது.

ஆனால் சண்முகத்தின் தாத்தாதான் யோசனையுடன் அமர்ந்திருந்தார்.

"என்ன பெரியவரே, எங்க மேலே நம்பிக்கை வரலியா?" என்றேன்.

பெரியவர் மீசையை நீவிவிட்டபடி சிரித்தார்.

"நம்ம கலாசாரம் நாலு பேருக்குப் பயன்படற மாதிரி, நிரந்தரமான நன்மை தருகிற மாதிரி, விழாக்களைக் கொண்டாடறதுதான். அந்தக் காலத்துலே நம்ம பெரியவங்க செஞ்ச காரியங்களைப் பாருங்க, கோயிலைக் கட்டறது, குளத்தை வெட்டறது, பள்ளிக்கூடத்துக்கு பெஞ்ச் வாங்கித் தருவது, கோயிலுக்கு லைட் போடறது, ஊருக்கு உபகாரமாய், மற்றவங்களுக்கும் நிரந்தரமாய், நீண்ட காலம் பயன்படற மாதிரி செயல்களைத்தான், தங்கள் பிறந்த நாளன்னிக்கோ, வீட்டு விசேஷத்தன்னிக்கோ செய்வாங்க."

பெரியவர் நிறுத்தி விட்டுத் தொடர்ந்தார்.

"உங்க செயலின் நோக்கம் நல்லதுதான். ஆனால் அதிலே மேற்கத்திய தாக்கம் இருக்கு. என் பேரனை ஒருநாள் 'ராஜா'வாக்கி, மறுபடியும் இங்கே திருப்பிக் கொண்டு வந்து விட்டுடறீங்களே, அதுலே என்ன பெரிய பிரயோஜனம் இருக்கு, சொல்லுங்க?"

யோசித்துப் பார்த்தேன். எனது அத்தனை நேரப் பெருமையும் ஓடிப் போனது போல ஓர் உணர்வு.

"என் பேரனுக்கு தேவையில்லாத ஏக்கத்தை உண்டுபண்ணாதா உங்க செயல்? அல்வா ருசி தெரியாத வரைக்கும், சாப்பிடற ஆசை வராது. கொஞ்சம் ருசி கண்டுட்டாலும், மனசுல தீராத ஏக்கம் புகுந்துடுமே!"

அவர் சொன்னதை மௌனத்தின் மூலம் ஏற்றுக் கொண்டேன்.

"இப்பச் செய்யறதையே கொஞ்சம் வேற மாதிரி பண்ணலாமே. ஏழைக் குழந்தைகளுக்கு படிக்கறதுக்கு உதவியாய் நோட்டு, பென்சில் வாங்கித் தரலாம். பத்து, பதினைந்து குழந்தைங்க படிக்கறதுக்கு வசதியாய் பள்ளிக் கட்டணம், பள்ளிச் சீருடை வாங்கித் தரலாம். இல்லே, நிரந்தரமாய் உங்களாலே முடிஞ்ச பசங்களை போர்டிங் ஸ்கூலிலே போட்டு, படிக்கற செலவை ஏத்துக்கலாம். அது அவங்க வாழ்விலே விளக்கேத்தின மாதிரியாச்சே."

பெரியவரை நோக்கிக் கைகூப்பினேன். சண்முகத்தை அருகில் அழைத்து, முதுகில் தடவிக் கொடுத்தேன்.

"நிறையப் படிச்சு, பெரிய ஆளாய் வரணும்னு ஆசையிருக்கா கண்ணா உனக்கு?"

பலமாய்த் தலையாட்டினான். ●

*"தலைவரே! நீங்க எட்டடி பாய்ந்தால் உங்க மகன் பதினாறு அடி பாய்வான் போலிருக்கு..."*

*"பலே! பலே! என்ன சாதிச்சான்? விவரமா சொல்லுங்க!"*

*"ஏண்டா ஸ்கூலுக்கு வரலைன்னு கேட்டதுக்கு, வெளியிலிருந்து ஆதரவு தரப் போறதா சொல்றான்!"*

*- யமுனா ரங்கநாதன்*



# கோலிவுட்டில் புது டிரெண்ட்



முதலில் நம்ப முடியவில்லை. எதற்கும் இருக்கட்டும் என்று கண்களைக் கசக்கிக் கொண்டு பார்த்தால், சத்தியமாக அது பிரவின்காந்த். 'ரட்சகன்', 'ஜோடி' 'ஸ்டார்' என்று பிரம்மாண்டமான படங்களைக் கொடுத்த அதே இயக்குனர். அவருக்கு என்ன இப்போது? அடுத்த படத்தை இயக்க வந்துவிட்டாரா? அதுதான் இல்லை. குர்லின் சோப்ரா, சோனிகா ஆகிய இரு இந்தி

* 'ஆட்டோகிராஃப்' சேரன் - கோபிகா



# ஆரம்பிச்சுட்டாங்கய்யா!

தேவதைகளோடு, அட்டகாசமாக டூயட் ஆடிக் கொண்டிருந்தது பார்ட்டி. அப்படிப் போடு அரிவாளை! இயக்குனர்கள் எல்லாம் கதாநாயகர்கள் ஆகி, கோடிக்கணக்கில் சம்பளம் கேட்கும் ஹீரோக்களின் வயிற்றில் இடி இடிக்கச் செய்யும் காலம் இது. இந்தப் புதிய டிராண்டிற்குப் பிள்ளையார் சுழி போட்டவர் ஆட்டோகிராஃப் சேரன். ஆட்டோகிராஃப் கதையை ஆளாளுக்கு 'இது எதற்கும் ஆகாத கதை' என்று புறக்கணிக்க, வெறுத்துப் போன சேரன், 'சொல்ல மறந்த கதை' தந்த உற்சாகத்தில், தாமே ஹீரோ வேஷம் கட்டினார். 'ஆட்டோகிராஃப்' சில்வர் ஜுப்ளியாகி விட்டது. கதை பிடிக்கலே என்று சேரனுக்குக் கடுக்காய் கொடுத்த ஹீரோக்கள், இப்போது வயிற்றிலும் வாயிலும் அடித்துக் கொள்கிறார்கள்.

இன்னொரு பக்கம் ஹாலிவுட்டிலிருந்து உருவி, சூப்பராய் தமிழ்ப்படுத்திய 'நியூ' படத்தின் கதையை இயக்குனர் எஸ்.ஜே. சூர்யா, அஜித் திடம் சொல்ல, 'ஆகட்டும் பார்க்கலாம்' என்று அல்வா கொடுத்து விட்டாராம். விளைவு! சிம்ரனோடு ஜோடி சேர்ந்து, இரண்டாவது 'இயக்குனர் ஹீரோவாக' கிரீடம் சூட்டிக் கொண்டு விட்டார் இயக்குனர் எஸ்.ஜே. சூர்யா. 'நியூ' படம் ஆகஸ்டில் வெளியான பிறகு, அஜித் தமக்குதாமே ஆழ்ந்த வருத்தத்தை தெரிவித்துக் கொள்ளலாம். படம் அத்தனை கமர்ஷியல் பிளாக் பஸ்டர் என்று அடித்துச் சொல்கிறது கோலிவுட்.













* 'துள்ளல்' பிரவின்காந்த் - சூர்லின்



என்கிட்டே வந்து சொல்றீங்களே"னு திருப்பி அனுப்பினாங்க. பார்த்தேன்! இதோ ஆட்டத்தில் இறங்கியாச்சு. இதில் தப்பு என்ன இருக்கு?" என்று திருப்பிக் கேட்க.. 'ஒரு தப்பும் இல்லை, அப்பு' என்று கையைக் குலுக்கி வாழ்த்தினோம்.

கடைசியாகக் கிடைத்த தகவலின் படி 'ஜி' படம் முடிந்த பிறகு, இயக்குனர் லிங்குசாமியும் ஹீரோவாகக் களமிறங்கப் போவது கிட்டத்தட்ட உறுதியாகிவிட்டதாம். ஆரம்பிச்சுட்டாங்கய்யா, ஆரம்பிச்சுட்டாங்க! - ஸ்ரீ

இந்தச் சூழ்நிலையில்தான் சேரனும், சூர்யாவும் தந்த தைரியத்தில் பிரவின் காந்த், 'துள்ளல்' படம் மூலம் ஹீரோவாக நடிக்க வந்திருக்கிறாரா? இல்லை நீண்ட நாள் திட்டமா? அவரிடமே கேட்டால், சேரனும் சூர்யாவும் சந்தித்த அதே பிரச்னைதான் இவருக்கும். "யாருன்னு பேர் சொல்ல விரும்பலை. நான் இன்னிக்கு மேக்-அப் போட்டு நடிகனா மாறினதுக்கு சில நடிகர்கள்தான் காரணம்" என்றார், சின்ன இடைவெளி விட்டு. புரியலையே?!

"ஏங்க மேடம்! நீங்க எங்க! நான் எங்கன்னு அனுதாபத்தைத் தேடியே பெண்களைக் கவரும் அப்பாவி கேரக்டர். படத்தின் தலைப்பைப் போலவே துள்ளலான கதை. இதை பல ஹீரோக்களிடம் போய்ச் சொன்னேன். "ஏன் ஸார், ஹீரோயின்கிட்டே போய்ச் சொல்ல வேண்டிய கதையை,





* 'நியூ' - சூர்யா - கிரண்

# விலை குறையாத ஆற்று மணல்!

ஆற்று மணல் விலையில் மீண்டும் கண்ணா மூச்சி ஆட்டம் துவங்கிவிட்டது. ஏழெட்டு மாதங்களுக்கு முன்பாக மணல் குவாரிகள் தனியார் குத்தகைதாரர் வசமிருந்தபோது, ஒரு லாரி மணலுக்கு அரை பாடி லாரிக்காரர்களிடம் இருநூற்றைம்பது முதல் முந்நூற்றைம்பது ரூபாய் வரைக்கும் வசூலித்தனர். பொதுமக்களுக்கு அந்த மணல் எழுநூறிலிருந்து, தொள்ளாயிரம் ரூபாய் விலைக்குள் கிடைத்து வந்தது. அதன் பின்னர் தடாலடியாக ஆற்று மணல் குவாரிகளை அரசே ஏற்று நடத்த முன் வந்தது. அப்போது ஒரு லாரி மணல் (இரண்டு யூனிட்) விலையானது, ரூபாய் ஆயிரத்து நாற்பத்தி ஆறு என்று எட்டாத உயரத்துக்கு நிர்ணயம் செய்தது, தமிழக அரசு.




அதனால் சமீபத்திய ஏழெட்டு மாதங்களாக பொதுமக்களுக்கு, ஒரு லாரி மணல் ஆயிரத்து ஐந்நூறு ரூபாயிலிருந்து, இரண்டாயிரம் ரூபாய் வரை விலை கொடுத்துப் பெறும் சூழ்நிலை ஏற்பட்டது. இந்த விலையேற்றமானது கட்டடங்கள் கட்ட முனைவோர் அனைவருக்கும் பெரும் சுமையாயிற்று. பொதுமக்கள் தரப்பிலிருந்தும் எதிர்ப்பு கிளம்பியது. தமிழக முதல்வர் ஜெயலலிதா, அவரது கட்சி சந்திக்க நேர்ந்த மக்களவைத் தேர்தல் தோல்விக்குப் பிறகு அறிவித்த அதிரடி சலுகைகளின் தொடர்ச்சியாக, சமீபத்தில் அறிவித்தது ஆற்று மணல் விலைக் குறைப்பு உத்தரவு.

இனிமேல், மணல் கிடங்கிலிருந்து ஒரு லாரி மணல் (இரண்டு யூனிட்கள்) அறுநூறு ரூபாய்க்கு கிடைக்குமென அறிவித்தது தமிழக அரசு. பொதுமக்கள் பயன் பெற வேண்டுமென்று, நானூறு ரூபாய் விலை குறைக்கப்பட்டுள்ளதாகக் கூறப்பட்டது. அரசினால் குறைத்துக் கொள்ளப்பட்ட நானூறு ரூபாய், மணல் வாங்குவோர் எவரையும் சென்றடையவில்லை என்பதே இன்றைய நிலை.

திருச்சி மாவட்டத்தில் மட்டும் இருபத்தி மூன்று இடங்களில், காவிரி மற்றும் கொள்ளிடம் ஆற்றுப் படுகைகளில் மணல் குவாரிகள் இயங்கி வருகின்றன. ஆற்றில் பொக்லைன் மூலமாக மணலை அள்ளி, லாரிகள் மூலமாக டெப்போவில் கொட்டிவிட்டு, மீண்டும் டெப்போ மணலை பொக்லைன் மூலமாக அள்ளி, மணல் லாரிகளில் ஏற்றி அனுப்பும் முறை வழக்கத்தில் இருந்தது. இந்தப் பணியை மேற்கொள்ள, பொக்லைன் மற்றும் லாரிகள்

வைத்திருக்கும் தனியார்களை ஒப்பந்தம் மூலம் பணியமர்த்தி, பொதுப் பணித்துறை செயல்படுத்தி வந்தது. மணல் விலையைக் குறைத்த அரசு, மணல் லாரிகளே குவாரிகளுக்குள் சென்று மணலை ஏற்றிக் கொள்ளலாம் என்றும் அறிவித்தது. அதனால் மணல் டெப்போவுக்கு அவசியமற்ற நிலை ஏற்பட்டது. மேலும் குவாரிகளில் பொக்லைன் மூலம் மணல் ஏற்றுவதற்கு, ரூபாய் தொள்ளூறு வரை ஒப்பந்தத் தொகையாக நிர்ணயம் செய்யப்பட்ட செலவினமும் நடைமுறையில் இருந்தது. எனினும் இந்தக் கட்டணமும் மணல் விலையோடு அடக்கம் என்பதால், இரண்டு யூனிட் மணலின் விலை அரசு நிர்ணயித்த படி, ரூபாய் அறுநூறு மட்டும்தான். குவாரிகளில் தற்போது இத்தொகையே வசூலிக்கப் பட்டு வருகிறது. அப்படியானால் மார்க்கெட்டில் மணல் விலை ஏன் குறையவில்லை?



• நீதிமுத்து சீனிவாசன்

மணல் லாரிகளில் மணல் அள்ளிப் போடும் 'பொக்லைன்' இயந்திர கான்டிராக்டர்கள், மணல் லாரிக்காரர்களிடம் ஒவ்வொரு லாரி மணலுக்கும், ரூபாய் இருநூறிலிருந்து நானூறு வரைக்குமாக 'தனியாக' கட்டாயமாகக் கறந்து விடுகின்றனர். மேலும் தற்போது மணல் அள்ளுவதற்கு பொக்லைன் ஆபரேட்டர்களுக்கு அரசு நிர்ணயித்துள்ள கட்டணம் கட்டுப்படியாகாது என்றே அவர்கள் கருத்துத் தெரிவிக்கின்றனர். முன்பு அரசுக்கு மட்டுமே செலுத்தி வந்த ஆயிரம் ரூபாய் தற்போது அரசு மற்றும் பொக்லைன் ஆபரேட்டர்கள் என இரு பிரிவாகச் சென்றடைகிறது. அவ்வளவுதான்.'

அரசு அறிவிப்பு செய்ததற்குப் பின்னர் முதல் ஒரு நாள் மட்டுமே விலை குறைக்கப்பட்டுப் பொது மக்களுக்கு மணல் கிடைத்தது. மறுநாளில் இருந்து மீண்டும் பழைய நிலைக்கே சென்றுவிட்டது மணல் விலை. மேலும் திருட்டு மணல் அடிப்பதும் எல்லை மீறிப் போய்விட்டது. அரசாங்கமே ஒரு வியாபாரியாக ஆகும்போது, அதன் சுமைகளைப் பொதுமக்களே தாங்கிக் கொள்ள வேண்டியுள்ளது. மணல் குவாரிகள் தனியார் வசம் வந்து விடும்போது, வியாபாரப் போட்டிகளில் மேலும் விலை குறைக்கப்பட்டு, பொதுமக்கள் பயன் அடைய வாய்ப்பு ஏற்படும். "அரசின் தற்போதைய மணல் விலைக் குறைப்பினால் பொது மக்கள் எவருக்கும் எந்தப் பயனும் இல்லை!" என்றார் முசிறி நீதிமுத்து மணல் சீனிவாசன்.

**இருள்நீக்கியான்**



மும்பையில் நடந்த அந்த அறக்கட்ட ஆண்டு விழாவுக்கு, சிறப்பு விருந்தினரா சென்று வந்து இறங்கினார் விவேக் ஓபராய். நிச முடிவில் ஐஸ்வர்யா ராயின் புகைப்படம் ஒன்று விடப்பட, எல்லாரையும் விட அதிகபட்சமா உள்ளம் கவர் காதலியின் புகைப்படத்தை வாங்கிக் கொண்டார்.

ஐஸ் புகைப்படத்தின் விலை.. ஐம்பத்து யிரம்!

தர்மத்துக்கு தர்மம்! காதலுக்கு மாங்காய் அடி!



# காதல்... ஒரு தரம்... இரண்டு தரம்...

## முக்காடு எதுக்கு?

கனவு தேவதை கரீனா கபூர், ஷாஹித் கபூர் விரித்த காதல் வலையில் விழுந்தே விட்டார். அரசல்புரசலாக கிசுகிசுக்கப்பட்ட லவ் மேட்டர், தற்போது அம்மணியாலேயே ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது.

"எங்களுக்குள் ஓர் இனிய ஒட்டுதல் (ஸ்வீட் பாண்ட்) இருப்பது நிஜம். இரண்டு பேருக்குமே இருபத்து மூன்று வயதுதானே ஆகுது! இப்ப சினிமா, டின்னர்னு சுத்திக்கிட்டு, ஜாலி நண்பர்களா இருக்கோம். மத்ததை அப்புறமா முடிவு பண்ணுவோம். அதுக்குள்ள இந்தப் பத்திரிகைக்காரங்க, ஓவரா பில்டப் பண்ணி தொல்லை பண்றாங்க" என்று கரீனா புலம்புகிறார். முழுசா நனைஞ்ச பிறகு, சீரியஸா அதுவும் முக்காடு போட்டுக்கிட்டு எதுக்குப் போஸ் தரணும்.

- ஆர்.எல்.

கொசுவத்தி, மின் கொசு மருந்து எதுவும் இல்லாத ஒரு காலத்தில், மிஸ்டர் எக்ஸ் அடித்துப் போட்டாற் போல் தூங்கிக் கொண்டிருந்தார்.

வாசகர்களும் மிஸ்டர் X ஜோக்ஸ் எழுதி அனுப்பலாம். பரிசு உண்டு!




# தன்மவாளத்தில்

ஆனால் அவரைத் தூங்க விடாமல் ஒரு கொசு காதருகே வந்து 'உய்ங்ங்... உய்ங்ங்...' என்று பாடிக் கொண்டிருந்தது. அவருக்கு பயங்கர எரிச்சல். நசுக்கிக் கொன்று விடலாம். ஆனால் மிஸ்டர் எக்ஸ¬க்கு தயாள குணம். ரத்தம் ஏதும் சிந்தாமல் கொசுவைப் பழி வாங்க நினைத்தார். கொசுவை தன் கையில் பிடித்து, தடவி, தாலாட்டுப் பாடி "தூங்குடா செல்லமே... ராஜா இல்ல'' என்று தூங்க வைத்தார். கண்கள் சொக்கி கொசு தூங்கும்போது ''உய்ங்ங்... உய்ங்க்...'' என மிஸ்டர் எக்ஸ் அதன் காதருகே பாட ஆரம்பித்தார்.

ஒரு பெண்ணின் காதல் வலையில் மிஸ்டர் எக்ஸ் வீழ்ந்தார். "நீ எனக்கு ஒரு ஜோடி முதலை பூட்ஸ் கொண்டு வந்தால்தான் கல்யாணம்'' என்று சொல்லி விட்டாள் அந்தக் காதலி. மிஸ்டர் எக்ஸ் ஆப்பிரிக்காவுக்குப் போய் மாயமாய் மறைந்து போனார். அவரைத் தேடி ஒரு குழு சென்றது. ஒரு வழியாக அவரைக் கண்டு பிடித்த போது, அவர் கத்தியும் கையுமாக ஒரு முதலையை வெட்டிக் கொண்டிருந்தார். முதலை மேல் நடந்து கொண்டே உறுமினார் மிஸ்டர் எக்ஸ், "71வது, நீயும் வெறுங்காலுடன்! ச்சே!"



ஓர் ஆஸ்பத்திரியில் ஐ.சி.யூ.வில் ஒவ்வொரு ஞாயிறன்றும் பதினொரு மணியளவில் நோயாளிகள் இறந்து போய்க் கொண்டேயிருந்தனர். காரணம் புரியவில்லை. மருத்துவர்கள் விழித்தனர். ஒருவேளை ஏதாவது காற்று கருப்பு காரணமோ, அல்லது செய்வினையோ என அஞ்சினர்.

டார். கூடவே கையில் ஒயின் பாட்டில்கள், கடித்துக் கொள்ள சிக்கன் டிக்கா என்று அமர்க்களப் படுத்திக் கொண்டிருந்தார். பொறுக்க வில்லை ஒருவருக்கு, "ஏன்யா, உயிர் விடறச்சே கூடவா தீனி?" என கேட்டே விட்டார். அசரவேயில்லை மிஸ்டர் எக்ஸ்... "அட நீங்க வேற, இன்னிக்குன்னு பார்த்து ரயில் லேட்டா வந்து, அதுக் குள்ள பசி தாங்காமல் நான் செத்துப் போயிட்டா?" என்றார் கூலாக!




# மிஸ்டர் எக்ஸ்!

ஒருமுறை மிஸ்டர் எக்ஸ் ரோடில் நடந்து கொண்டிருந்தார். ஒரு மேன் ஹோலின் மீது ஒருவன் நின்றுகொண்டு "86, 86, 86" என்று கூவிக் கொண்டிருந் தான். ஆவல் மேலிட மிஸ்டர் எக்ஸ் அந்த எண்ணிக்கையின் ரகசியத்தை வினவினார். "நா சொல்ல முடியாது. உனக்கு தெரிஞ்சே தான் ஆகணும்னா,



உன்னை உள்ளே விடறேன்" என்றான். ஒரு நிமிடம் யோசித்து விட்டு, மிஸ்டர் எக்ஸ் "ஓகே" சொல்லிவிட்டு மேன் ஹோலுக்குள் இறங்கினார். மேலே யிருந்த மனிதன் மூடியால் மூடி விட்டு, குதித்துக் கொண்டே கூவி னான் "87 87 87.."

வெளிநாட்டிலிருந்து அதைக் கண்டு பிடிக்கவென்றே திறமையான குழு வந்திறங்கியது.

அடுத்த ஞாயிறு காலை, பதி னொரு மணி. டாக்டர்கள், நர்ஸ்கள் கூட்டமாகக் கூடி 'இன்னிக்கு என்ன நடக்கப் போகுதோ' என பயத் துடன் அந்த வார்டை எட்டிப் பார்த் தனர்.

அவர்கள் கையில் பிரார்த்தனைப் புத்தகங்கள், சிலுவை மற்றும் இன்ன பிற மந்திரப் பொருட்கள்... பதினொரு மணியடித்தது.

ஞாயிறன்று வேலை செய்யும் பார்ட் டைம் துப்புரவுத் தொழிலாளி மிஸ்டர் எக்ஸ் வார்டில் நுழைந்து, லைஃப் சப்போர்ட் சிஸ்டம் ப்ளக் கைப் பிடுங்கி, வாக்யூம் கிளீனரைப் போட்டு 'லல்லா லலா...' என்று பாடிக் கொண்டே சுத்தம் செய்ய ஆரம்பிக்க... உண்மை வெட்ட வெளிச்சமானது!

ஒருமுறை மிஸ்டர் எக்ஸ் தற் கொலை செய்யும் எண்ணத்துடன் தண்டவாளத்தில் உட்கார்ந்து கொண்

- எல்.எஸ்.



# மாட்டு வண்டிப் பயணப்

"கவுளிச் சத்தம் கேட்டுடுச்சு! சாமி உத்தரவு கிடைச்சுடுச்சு! மாட்டு வண்டி பூட்டுங் கப்பா.." என்று கிராமத்து முக்கியஸ்தர் சந்தோஷமாகச் சொல்லவும், தோகை மலை கிராம மக்கள் "ரங்கா.. ரங்கா.." என்று பக்தியுடன் ஆரவாரம் செய்து கொண்டே கிளம்பிவிடுகிறார்கள்.

சுமார் இருநூற்று ஐம்பதுக்கும் மேற் பட்ட மாட்டு வண்டிகள்... எல்லாமே இரட்டை மாட்டு வில் வண்டிகள். ஆண் கள், பெண்கள், குழந்தைகளுடன், பொங்கல் பானைகள், காய்கறி, மளிகைச் சாமான், விறகு, சமையல் பாத்திரங்கள் எல்லாம் ஏற்றப்படுகின்றன. வண்டிகளின் மேற் கூரையில் வைக்கோல் பரப்புகள்; கால் நடைகளுக்குத் தீவனம் வேண்டுமே!

சூடம் கொளுத்தி, பூசணிக்காய் உடைத்ததும், 'ஜல்ஜல்' என்று வண்டிகள் கயிறு பிடித்ததுபோல, ஒரே ஒழுங்கில் திருச்சி, ஸ்ரீரங்கம் கோயிலை நோக்கி விரைகின்றன. பேச்சும் சிரிப்புமாக, வித்தி யாசமான பக்திப் பயணம் ஆரம்பிக்கிறது.

கரூர் மாவட்டம் தோகைமலை ஒன்றியப் பகுதியைச் சார்ந்த கிராம மக் களுக்கு, குல தெய்வம் ஸ்ரீரங்கம் ஸ்ரீரங்க நாதர். பல நூற்றாண்டுகளாக, அவர்கள் தங்களது நேர்த்திக் கடனை இப்படி மாட்டு வண்டிப் பயணம் வைத்தே செலுத்தி வருகின்றனர்.

கிராமங்களிலிருந்து கிளம்பும்போதே, தங்களது மூன்று நாள் உணவுக்கான பொருள்களைக் கொண்டுவந்து விடுகின்ற னர். மேலூர் பகுதியில் உள்ள மணித் தோப்பில் தங்கி, சமைத்து சாப்பிட்டு ஓய்வெடுக்கின்றனர். மறுநாள் காலை, கொள்ளிடக்கரைக்குச் சென்று முடி காணிக்கை தருகிறார்கள். அங்கேயே கோயில் மாடுகளுக்கும் விசேஷ பூஜைகள் செய்கிறார்கள். பிறகு, ஸ்ரீரங்கம் வடக்கு வாசல் கோபுர வழியாக, ஸ்ரீரங்கநாதர், தாயார் மற்றும் அனைத்து சுவாமி சன்னதிகளுக்கும் சென்று 'சாமி' கும்பிடுகின்றனர்.

இந்த நேர்த்திக் கடனுக்காக, ஊரி லிருந்து கிளம்பி வருவதற்கு, கிராம மக்கள் சாமி உத்தரவு கேட்பதே சுவாரஸ்யமான கதையாக இருக்கிறது.

ஊராளிக் கவுண்டர் சமூகத்து மக்கள் அனைவரும், காரணாம்பட்டி கோயில் வீட்டில், குறிப்பிட்ட நேரத்தில், குறிப் பிட்ட இடத்தில் கவுளிச்சத்தம் கேட் கிறதா என்று எதிர்பார்த்துக் காத்திருப் பார்களாம். பல்லி வந்து ஓசை எழுப்பிய தும், கோயில் வீடுகளில் உள்ள உண்டி யல்களைச் சுமந்து கொண்டு, ஸ்ரீரங்கத் துக்குக் கிளம்பிவிடுகிறார்கள்.

இந்தக் குழு, இங்கே தங்கியிருக்கிற அந்த மூன்று நாட்களில், மணித் தோப்பில் ஒரு குட்டி நகரமே உருவாகி விடுகிறது.



# பூட்டிக்கிட்டு...







திடீர் தேநீர்க் கடைகள், கையேந்தி பவன்கள், பொரி, பொட்டுக்கடலை வண்டிகள்; தள்ளுவண்டி ஐஸ், பலூன் விற்பவர்கள், வடை, போண்டா, பஜ்ஜி தவிர, பிளாஸ்டிக் பொருள்கள், துணி மணி வளையல் கடைகள் என, மினி டிபார்ட்மெண்டல் ஸ்டோரேகளை கட்டி விடுகிறது. "கீழ வெளியூர் கோபாலைப் பார்ப்பதற்காக, அவரது மச்சான் வந்திருக்கிறார். கோபால், உடனடியாக எங்கிருந்தாலும் வண்டிக்கு அருகே வரவும்" போன்ற தகவல் அறிவிப்பு அல்லாத சமயங்களில், "நான் பார்த்ததிலே அவள் ஒருத்தியைத்தான்'' போன்ற பழைய பாடல்களும், ''அப்படிப் போடு'' போன்ற புதிய பாடல்களும் காற்றில் கலந்து, திருவிழா சுவாரஸ்யம் தருவது தனி த்ரில்!

''எங்கள் ஊர் மக்கள் ஒற்றுமையாக இருப்பதற்கு இதுபோன்ற பரம்பரைப் பழக்கமும் காரணம்'' என்று மகிழ்ச்சியோடு சொல்கிறார், இந்தப் பயணத்தை வழிநடத்திய காரணாம்பட்டி ஆர். ராமையா.

கட்டுரை, படங்கள் :
ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

இக்காலத்தில் விவாக சீர்திருத்த முயற்சிகள் பல நடக்கின்றன. அவற்றில் ஒன்று கலியாணத்தில் மத சம்பந்தம் இருக்கக் கூடாதென்பதும், மந்திரங்களையும் சடங்குகளையும் ஒழித்து விடவேண்டுமென்பதும். இம் முயற்சி நல்லதென்று நான் நினைக்கவில்லை. மேலே கூறிய இலட்சிய விவாகத்திற்குரிய நிபந்தனைகள் எல்லாம் நிறைவேறுமானால், கலியாணத்தில் மதச்சம்பந்தமிருப்பது விரும்பத் தக்கதேயாகும். வீண் செலவுகளையும் அர்த்தமற்ற குருட்டு வழக்கங்களையும் நீக்கலாம். ஆனால் விவாகத்திற்கு, மற்ற சாதாரண உலக ஒப்பந்தங்களைப் போலன்றி, ஒரு புனிதத் தன்மை இருக்க வேண்டியது அவசியம். இதற்கு தெய்வ சந்நிதானத்தில், பெரியோர்களின் ஆசீர்வாதத்துடனும், வெகு காலமாக வழங்கி உரிமை பெற்ற மந்திரங்களுடனும் விவாகத்தை நடத்துவது உசிதம். குறிப்பிட்ட வகுப்பைச் சேர்ந்த புரோகிதர்களை உங்களுக்குப் பிடிக்கவில்லையானால் தள்ளி விடுங்கள். ஆனால், விவாகத்தின் புனிதத் தன்மையைக் கெடுக்க வேண்டாம்.

# "ஆகா, என்ன வாசனை!"



'பஞ்ச்' பத்திரிகையில் ஒரு சமயம் வெளியான பிரசித்தி பெற்ற விகடத்தைக் கேட்டிருப்பீர்கள்.

"கலியாணம் செய்து கொள்ள உத்தேசித்திருப்பவர்களுக்கு யோசனை :

வேண்டாம்" என்று அதில் பிரசுரமாகியிருந்தது. என்னுடைய யோசனை இதற்கு நேர்மாறானது. "காலா காலத்தில் கலியாணம் செய்து கொள்ளுங்கள்" என்று பெரியோர் சொல்லும் யோசனையை, நான் முழு மனத்துடன் ஆதரிக்கிறேன்.

இல்வாழ்க்கையில் இப்போதுதான் சங்கடங்களையெல்லாம் சொல்லி விட்டு, " விவாகம் செய்து கொள்ளுங்கள்" என்று நான் முடிப்பதைப் பார்க்கும் பொழுது, உங்களுக்கு ஒரு கதை ஞாபகம் வரலாம். கிராமவாசிகள் நால்வர் கூத்துப் பார்க்கப் புறப்பட்டார்கள். வீதியில் ஒரு பிள்ளையார் கோவில் இருந்தது. பிள்ளையாரிடமிருந்து கமகமவென்று வாசனை வீசிற்று. "நாமும் கொஞ்சம் வாசனை பூசிக் கொண்டு போகலாம்" என்று கிராம வாசிகளில் ஒருவன் பிள்ளையார் தொப்புளில் விரலை விட்டான். அங்கே குடியிருந்த தேள் அவன் விரலில் கொட்டிவிட்டது. அந்த விரலை அவன் முகர்ந்து பார்த்து, "ஆகா! என்ன வாசனை!" என்று கூவினான்.



• மகள் ஆனந்தியின் திருமணத்தில் கல்கி

இன்னொருவன் தொப்புளில் விரலை விட்டான். அவனையும் தேள் கொட்டிற்று. அவனும் அவ்வாறே பாசாங்கு செய்ய, இம்மாதிரி நாலு பேரையும் தேள் கொட்டிவிட்டது.

என்னுடைய யோசனையும் இதுபோல் தானோ என்று உங்களுக்குத் தோன்றக் கூடும். உண்மை அப்படியன்று. பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளுக்குக் கலியாணம் செய்து வைப்பதில் அவ்வளவு கவலை காட்டுகிறார்களே, ஏன்? தாங்கள் அநுபவித்த துன்பத்தை அவர்களும் அநுபவிக்க வேண்டுமென்றா? ஒரு நாளுமில்லை.

விவாக முறையில் எவ்வளவு குறைபாடுகள் இருந்தாலும், இல்வாழ்க்கைதான் ஜீவர்களுடைய இயற்கை. இல்வாழ்க்கையில் தான் மனிதனுடைய வாழ்வு பூர்ணமாகிறது. எவ்வளவு குறைபாடுள்ள இல்வாழ்க்கை நடத்தியவர்களானாலும், அதன் மேன்மையையும் உணர்ந்தேயிருப்பார்கள். ஆகையினால்தான், அநேகமாகப் பெற்றோர்கள் எல்லாரும் தங்கள் பிள்ளைகளுக்கு மணம் செய்து வைப்பதில், அவ்வளவு கவலை காட்டுகிறார்கள்.

உங்களில் கலியாணம் ஆகாதவர்களுக்கு ஓர் எச்சரிக்கை செய்ய விரும்புகிறேன். இலட்சிய இல்வாழ்க்கைக்குரிய நிபந்தனைகளை மேலே விவரித்திருக்கிறேனல்லவா? அவையெல்லாம் நிறைவேறிய பிறகு தான் கலியாணம் செய்து கொள்வது என்று எண்ணினீர்களானால், பிள்ளையாரின் கதி தான் நேரும். தற்போதுள்ள நமது சமூக நிலைமையில் எந்த வரையில் அவை நிறைவேறுவது சாத்தியம் என்று பார்க்க வேண்டும். உலகில் எல்லாத் துறைகளிலும் அபிவிருத்தி ஏற்பட்டு வருவது போல், இந்தத் துறையிலும் அபிவிருத்தி ஏற்படுத்தான் வருகிறது. அதற்கு வேண்டிய முயற்சிகளை நாமும் செய்ய வேண்டும். சமூக விதிகளையும், சர்க்கார் சட்டங்களையும் மாற்றுவதற்கு எல்லாப் பிரயத்தனங்களும் செய்ய வேண்டும். ஆனால், நமது முயற்சிகளின் நலன்களை நமது சந்ததிகள்தான் அநுபவிப்பார்கள்.

சுருங்கச் சொன்னால், சம்சார சாகரத்தில் கண்ணைக் கட்டிக் கொண்டு தொப்பென்று விழ வேண்டாம்; கண்ணைத் திறந்து கொண்டு அதிலுள்ள இன்ப துன்பங்களையெல்லாம் அநுபவிக்கச் சித்தமாக இறங்குங்கள் என்பதுதான் என் யோசனை.

கடைசியாக ஒரு வார்த்தை!

**மங்களம்.**

**அமரர் கல்கி**



அர்ச்சனா கண்ணாடியைப் பார்த்து தலைமுடியைச் சரி செய்து கொண்டாள். குங்குமப் பொட்டு சற்றே நகர்ந்து இருப்பது போலத் தோன்றியது. அதை எடுத்து சரியாக வைத்துக் கொண்டாள்.

''அம்மா போலாமா?'' என்று அவசரம் காட்டினாள் ஆர்த்தி.

''ம்... பூஜைக் கூடையை எடுத்துக்க...'' என்றாள் அர்ச்சனா.

இருவருமாக அறையை விட்டு வெளியே வந்தார்கள்.

அகிலாண்டேஸ்வரி களைப்பாக ஈஸிசேரில் சாய்ந்திருந்தாள்.

''ஏன் அத்தே இங்கே வந்து உட்கார்ந்துட்டு இருக்கீங்க. படுத்துக்க வேண்டியது தானே?'' என்றாள் அர்ச்சனா.

''கொஞ்ச நேரம் உட்கார்ந்துக்கறேன். இன்னிக்கு வெள்ளிக்கிழமை. விளக்கு வெச்ச நேரத்து எதுக்கு படுத்திருக்கிறது'' என்றாள் அகிலாண்டேஸ்வரி.

அதைச் சொல்லி முடிப்பதற்குள் இடையில் நான்குமுறை இருமி விட்டாள். ஒரு வாரமாகவே காய்ச்சலும் இருமலுமாக இருக்கிறது.

''சரி அத்தே, நாங்க கோயிலுக்கு போயிட்டு வரோம்" என்றாள் அர்ச்சனா.

"டாட்டா பாட்டி" என்றாள் ஆர்த்தி.

இருவரும் வீட்டு வாசலில் இறங்கினார்கள்.

பக்கத்து வீட்டு வாசலில் ஒரு பெண் தன் மகனைப் போட்டு அடித்துக் கொண்டிருந்தாள்.

"என்னக்கா, எதுக்கு அடிக்கறீங்க?" என்று கேட்டாள் அர்ச்சனா.

"பாரு அர்ச்சனா, வீட்டுக்குள்ளேயே பந்து விளையாடி முகம் பார்க்கற கண்ணாடியை உடைச்சுட்டான். அவர் வந்தா, உடைக்கிற வரைக்கும் நீ என்ன செய்துட்டு இருந்தேன்னு என்னைத் தான் திட்டுவார்!" என்றாள் அவள்.

''சரி விடுக்கா. இனிமே அப்படி பண்ண மாட்டான்'' என்று சிபாரிசு செய்துவிட்டு, ஆர்த்தியுடன் நடக்க ஆரம்பித்தாள் அர்ச்சனா.

தெருமுனையை அடைந்த போது எதிர்பட்ட அந்தப் பெரியவர் புன்னகை செய்தார்.

"என்னம்மா, கோவிலுக்கா?"

"ஆமா தாத்தா. எப்படி இருக்கீங்க?" என்று கேட்டாள் அர்ச்சனா.

"இருக்கேன்ம்மா. மூட்டு வலி தான் தாங்க முடியலை."

# வேண்டுதல்

''வலின்னு சொல்லிட்டு எதுக்கு நடந்து வர்றீங்க. பையனை ஸ்கூட்டர்ல கொண்டு வந்து விடச் சொல்றதுதானே?"

''அவனா? சாப்பாடு போடறதே பெரிய விஷயம்'' என்று சிரித்தார்.

"சரி, பார்த்துப் போங்க" என்றாள் அர்ச்சனா.

அவர் ஆர்த்தியின் கன்னத்தில் தட்டி விட்டு நடந்தார். அர்ச்சனாவின் பக்கத்து வீட்டில் இருப்பவர். இரண்டு பிள்ளைகள். இன்னொருவன் நான்கு தெருக்கள் தள்ளி இருக்கிறான். நீ ஒரு மாதம், நான் ஒரு மாதம் என்று கணக்குப் போட்டு, சாப்பாடு போடுகிறார்கள். சரியாக ஒரு மாதம் ஆனதும் மனிதர் இடம் மாறுவார். பார்க்கப் பாவமாக இருக்

ஆரணி யுவராஜ்




சமீபத்தில் சற்று ஓய்வாய் இருந்த அமிதாப்பச்சன், டீவி முன்பு அமர்ந்து சேனல்களி டையே தாவிக் கொண்டிருந் தாராம், தற்செயலாக ஆந்திரா வில் நூறு விவசாயிகள் தற்கொலை செய்து கொண்ட செய்திக் கதையைப் பார்க்க நேர்ந்ததும், அப்படியே அதிர்ந்து போனாராம்.

விசாகப்பட்டினம் அருகே நடந்த படப்பிடிப்புக்குப் போன சமயம், என்ன ஏது என்று விசாரித்திருக்கிறார். வங்கி களில் வாங்கிய கடனைக் கட்ட முடி யாத நெருக்கடியில் விவசாயிகள் இந்த முடிவுக்கு வந்தது தெரிந்ததும், வருந் தினாராம். அதுவும் இருபதாயிரம், ஐம்பதாயிரம் போன்ற சொற்ப தொகை களுக்காக இந்தச் சாவுகள் ஏற்பட் டிருப்பது கேட்டு மனம் கலங்கி விட்டாராம். உடனே ரோட்டரி சங்கம் மூலமாக, நன்கொடை கொடுத்து தகுந்த நிவாரண உதவி செய்யும்படி கேட்டுக் கொண்டாராம்.

எத்தனை லட்ச ரூபாய்க்கான நன்கொடை செக் தெரியுமா? பதினொரு லட்சம்!

ஆளும் உயரம்.. மனசும் உயரம்!

---

கும்.

அர்ச்சனாவும், ஆர்த்தியும் கோவிலை நெருங்கிய நேரத்தில் அந்த நிகழ்ச்சி நடந்தது.

கோவிலின் அருகே இருந்த ஒரு மரத் தடியில், ஒரு நாய் மூன்று குட்டிகளுடன் இருந்தது. தாயின் அருகிலேயே இருந்த குட்டிகளில் ஒன்று திடீரென விலகி ஓடியது. அப்போது அந்தப் பக்கமாக ஒரு சிறுவன் சைக்கிளில் வேகமாக வந்தான்.

திடீரென குறுக்கே வந்த குட்டியை கவனிக்காமல், சிறுவனின் சைக்கிள் குட்டியை மோதியது. அது வேதனை யான குரலை வெளிப்படுத்தியது.

குட்டியின் ஒரு காலில் சரியான அடி. அந்தக் காலை தூக்கிக் கொண்டு, மெல்ல தாயோடு நடந்துச் சென்றது. தாய் நாய், நாக்கினால் வாஞ்சையுடன் தடவிக் கொடுத்தவாறு அழைத்துச் சென்றது.

''அடி பட்டு இருக்கே. அதை யாரும்மா டாக்டர்கிட்டே கூட்டிட்டுப் போவாங்க?''

''தானா சரியாப் போகும். வா'' என்று கூறி அழைத்துச் சென்றாள்.

இருவரும் கோவிலுக்குள் நுழைந் தார்கள்.

''சாமிகிட்டே பாட்டிக்கு சீக்கிரமா குணமாகணும்னு வேண்டிக்க'' என்று கிசுகிசுத்தாள் அர்ச்சனா.

கண்களை மூடி கரங்களைக் கூப்பி னாள்.

கற்பூர ஆரத்தியை கண்களில் ஒற்றிக் கொண்டாள். மகளுக்கும் ஒற்றினாள். குங்குமத்தை வைத்துக் கொண்டார் கள்.

இருவரும் சந்நிதானத்தை மூன்று முறை சுற்றிவிட்டு, ஒரு தூணருகே அமர்ந்தார்கள்.

''ஆர்த்தி, சாமிகிட்டே வேண்டிக் கிட்டியா?'' என்று கேட்டாள் அர்ச்சனா.

''ஓ'' என்று தலையை ஆட்டினாள் ஆர்த்தி.

''என்ன வேண்டிக்கிட்டே?''

''பாட்டிக்கு சீக்கிரமா ஃபீவர் போக ணும். ரமேஷோட அம்மாவை கண் ணாடி உடைச்சதுக்கு அங்கிள் திட்டக் கூடாது. மீசை தாத்தாவுக்கு முட்டி வலி சரியாகணும். நாய்க் குட்டிக்கு காயம் சீக்கிரமே ஆறணும். அப்புறம் என் ஃப்பிரண்ட் சுஜிதா பென்சில் தொலைஞ் சுப் போச்சு. அது கிடைக்கணும்!'' என்று ஆர்த்தி சொல்லிக் கொண்டே போனாள். ○




## பேரழகு - கல்யாணி வெங்கடராமன்

'இறப்பு என்பதை இன்முகத்தோடு வரவேற்க வேண்டும்' என்று கூறவும் ஒரு பக்குவம் வாய்க்க வேண்டும். பக்குவத்துடனான பார்வையில் தெரியும் தனிமனித, சமூக, வாழ்வியலை, உலகை, பாடல்களாய் வடித்த தொகுப்பு.

**கல்யாணி வெங்கடராமன், 21 இ. நியுடெக் ஐயப்பா என்கிளேவ், சர். மாதவன் ரோடு, மகாலிங்க புரம், சென்னை - 34. விலை ரூ. 30/-**




## பண்டிகைகளும் விரதங்களும் - ஆர். பொன்னம்மாள்

பற்றை விடுவதற்கு பக்குவப் படுத்துவது விரதம். வாழ்வை அனுபவிக்கவே வருவது பண்டிகை. ஆனால் சுவாரஸ்ய முரண்பாடாக, பண்டிகைகளும் விரதங்களும் சேர்ந்தே அமைந்திருக்கின்றன. அவற்றின் காரணத்தையும், வரலாற்றையும், தாத்பரியத்தையும் கூறி வழி காட்டும் நூல்.

**கங்கை புத்தக நிலையம், 23. தீனதயாளு தெரு, தி. நகர், சென்னை - 17 விலை ரூ. 100/-**

## இதுதான் சினிமா - கேயார்

நூற்றாண்டைக் கண்டு விட்டாலும், தொழில்நுட்பத்திலும், தரத்திலும் எதிர்விகிதத்தில் வளர்ந்து விட்டிருக்கும் தமிழ்த் திரையுலகம், பலருக்கு இன்னும் இரவிலும், திரையிலும் மின்னும் நட்சத்திரங்களாய், எளிதில் கைக்கெட்டாமல்தான் இருக்கிறது. அரசாங்கத்தால் தொழில் என்று அங்கீகரிக்க இயலாத இதில் டிஸ்டிரிப் யூட்டர்கள், தணிக்கை, ஃபைனான்ஸ், நடிக, நடிகையர், டைரக்டர்கள் என்ற அபாயக் கோணங்களின் பரிமாணங்களைக் காட்டி, செல்லுலாயிட் சாதனக் கனவுகளுடன் நுழைபவர்கள் செல்லாக் காசாகிவிடாமலிருக்க எச்சரிக்கும் நூல்.

**- போதி, ஜி-2, வி. ஜாலி அபார்ட்மெண்ட்ஸ், 38, காவேரி தெரு, சாலிகிராமம், சென்னை - 93. விலை ரூ. 100/-**




## ஐந்தாம் வேதம் - மணவை பொன். மாணிக்கம்

எல்லைகளும் பரிமாணங்களும் மாறிக் கொண்டேயிருக்கும் காதல், உருகவும் வைக்கிறது, உருவாக்கவும் செய்கிறது. நோயையும் மருந்தையும் அதுவே கொடுக்கிறது. போராடியே வெற்றியும் தோல்வியும் அடைகிறது. கல்யாணத்தில் முடிந்து பின் கசந்து விடும் காதலைவிட, இறுதிவரை நினைவில் வாழுகிற காதல் பெருமைக்குரியது. அப்படி பெருமைக்குரிய காதலைச் சந்தித்தவர்களின் உண்மை அனுபவங்களைக் கொண்டு படைக்கப்பட்ட காதல் வேதம்.

**கற்பகம் புத்தகாலயம், 50/18, ராஜாபாதர் தெரு, தி. நகர், சென்னை - 17 விலை ரூ. 50/-**

**- விஷ்வக்**

சிறந்த கேள்விக்கான பரிசாக விஜய்யின் 'மதுர' திரைப்படப் பாடல் ஆடியோ காசட்டை கோவை சி.மணி பெறுகிறார்.


• ரவிச்சந்திரன்


• ஏ.வி. பாஸ்கா


• விமலா


• சி. மணி


• கனிமொழி


• கே. கார்த்திக்


• தேவி

# விஜய்
## 'கில்லி' பதில்கள்

● நீங்கள் நடித்த பாத்திரங்களில் படம் வந்த பிறகும் அதன் பாதிப்பு இருந்த பாத்திரம்?

ஏ.வி. பாஸ்கர், சேலம்.

'கண்ணுக்குள் நிலவு' படத்தில் நான் பாதி மெண்டல், பாதி நார்மல் கேரக்டர். 'குஷி'யில் மிகவும் ஜாலியான ஸ்டூடண்ட். ஆனால் என்னையும் அறியாமல் பல காட்சிகளில் அந்த மெண்டல் கேரக்டர் போல நடித்தேன். இதைப் பார்த்த படத்தின் டைரக்டர் சூர்யா, "எப்போதும் பண்ற மாதிரி நார்மலா பண்ணுங்க" என்று சொன்னதும்தான், மெண்டல் கேரக்டரின் பாதிப்பைப் புரிந்து கொண்டேன்.

● விஜய்! உங்கள் இளமையின் ரகசியம் என்ன?

சி. ராமச்சந்திரன், திருச்சி - 17.

ரகசியம் எதுவுமில்லை. என் வீட்டில் ஹைடெக் ஜிம் கூடக் கிடையாது. சாதாரண ஃப்ளோர் எக்ஸர்சைஸ்தான் செய்கிறேன். யோகா, மெடிட்டேஷன் எதிலும் அதிக ஆர்வம் கிடையாது. ஆனால் சாப்பாடு ரொம்ப அளவாகச் சாப்பிடுவேன். ஜெபிக்க ரொம்பப் பிடிக்கும். ஜெபமே ஒரு மெடிட்டேஷன்தான்.

● விஜய்க்குப் பிடித்தது கண் தானமா? உடல் தானமா?

- சி. மணி, கோவை.

இரத்ததானம், அன்னதானம் இரண்டையும் சேர்த்துக் கொள்ளுங்கள். இரத்த தானம் உயிரைக் காக்கும். அன்னதானம் உயிரை வளர்க்கும். மற்ற தானங்களைவிட, அன்னதானத்தில்தான் சாப்பிட்டவங்க வயிறு நிறைந்ததும், நிறைவா 'போதும்'னு சொல்லுவாங்க. அதைப் பார்த்து சாப்பிடக் கூப்பிட்டவங்க மனசும் நிறையும்.

● உங்கள் நடனகுரு யார்?

கே. கார்த்திக், கரூர்.

யாருமில்லை. சிறு வயது முதலே சுயமாக ஆடிப் பழகினேன். அம்மா பாடகி என்பதால், வீட்டில் எப்போதும் பாடல்கள் ஒலித்துக் கொண்டிருக்கும். அந்த ரிதம்களுக்கு ஏற்ப ஆட ஆரம்பித்தேன். அவ்வளவுதான்.

● அதிர்ஷ்டம், ஜோதிடம், ராசி, நட்சத்திரம் இவற்றில் விஜய்க்கு நம்பிக்கை உண்டா?

விமலா, மதுரை.

உண்டு.

● திரையுலகில் யாரைப் பார்த்துப் பரிதாபப்படுவீர்கள்?

தேவி, மதுரை

ஸ்டண்ட் கலைஞர்கள். கண்ணாடிகளை உடைப்பது, உயரத்திலிருந்து குதிப்பது, டைவ் அடிப்பது, மோட்டார் சைக்கிளில் சறுக்கி விழுவது என்று இவர்களது தினசரி வாழ்க்கையே ரொம்பவும் ரிஸ்க்கானது. இவர்களுக்கு ஹெல்த் இன்ஷுரன்ஸ், விபத்து இன்ஷுரன்ஸ் மறுக்கப்படுவது அதைவிடக் கொடுமை.

● 'ஆட்டோகிராஃப்' சேரனுக்கு நிகழ்ந்ததுபோல விஜய்க்கு பள்ளிக்கூடக் காதல்?

கனிமொழி, மதுரை.

நான் படித்தது கோ-எஜுகேஷன் ஸ்கூல். எப்படி இல்லாமல் இருக்கும்? எல்லோரையும் போல எனக்கும் அந்த அட்ராக்ஷன் இருந்தது. ஈர்ப்பு மட்டுமே என்பதால் அதை எனக்குள்ளேயே வைத்துக் கொண்டேன். பிறகு கல்லூரி வந்ததும் அது மாறி விட்டது. அந்தப் பெண்ணின் முகம்கூட இப்போது மறந்துவிட்டது. ஸ்கூல் கேம்பஸுக்குப் போனால் ஞாபகம் வரலாம்.



# 'எக்ஸ்சேஞ்ச்' என்கிற ஏமாற்று வேலை!

"உங்களுடைய வீட்டு டைனிங் டேபிள், சோஃபா போன்ற ஃபேர்னிச்சர் பழசாகிவிட்டனவா? கவலைப்படாதீர்கள். உங்கள் பழைய ஃபேர்னிச்சரை எங்களிடம் கொடுத்துவிட்டு, புதிய ஃபேர்னிச்சர் வாங்கிக் கொள்ளலாம்" என்று ஒரு சிறு விளம்பரம், சென்னை அடையாறு பகுதியில் வெளியாகும் பத்திரிகையில் வந்தது.

அதைப் பார்த்துவிட்டு, அடையாரில் வசிக்கும் கண்ணபிரான் (பெயர் மாற்றப்பட்டுள்ளது) தமது வீட்டில் இருக்கும் பழைய சோஃபாவைக் கொடுத்து விட்டு, புதிய சோஃபா வாங்கிக் கொள்ள விரும்பி, விளம்பரத்தில் கொடுக்கப்பட்டிருந்த டெலிபோன் எண்ணுடன் தொடர்பு கொண்டு, தமது விருப்பத்தைத் தெரிவித்தார். மறுமுனையில் பேசியவர், அவர் வீட்டுக்கு வந்து பழைய சோஃபாக்களைப் பார்த்து விட்டு, மேற்கொண்டு பேசலாம் என்று சொன்னார்.

குறித்த நேரத்தில் டிப்டாப்பான ஆசாமி ஒருவர் வந்தார். பழைய சோஃபாசெட்களைப் பார்த்துவிட்டு, "உங்கள் சோஃபா செட்களை மூவாயிரம் நீங்கள் ஏழாயிரம் ரூபாய் கொடுத்தால் போதும். நீங்கள் செலக்ட் செய்துள்ள புதிய சோஃபா செட், ஒரு வார காலத்தில் உங்கள் வீட்டில் டெலிவரி செய்யப்படும்" என்று சொல்லிவிட்டு, ஏழாயிரம் ரூபாய்க்கு செக்கையும் வாங்கிக் கொண்டு, பழைய சோஃபாசெட்டையும் டெம்போவில் ஏற்றிக் கொண்டு போனார்.

டெலிவரி தினத்துக்கு இரண்டு நாட்கள் முன்பு, ஒரு டெலிபோன் வந்தது வீட்டுக்காரருக்கு. "திடீரென்று இரண்டு மூன்று தொழிலாளர்கள் லீவு போட்டு விட்டுப் போய்விட்டார்கள். அதனால் திட்டமிட்டபடி வேலையை முடிப்பதில் சில பிரச்னைகள். எனவே டெலிவரி தாமதமாகும். சிரமத்துக்கு மன்னிக்கவும்" என்று சொன்னார் சோஃபாசெட் வியாபாரி.

இரண்டு நாள் தாமதத்துக்குப்பின் போன் செய்துவிட்டு, நேரில் வந்தவர், "சார்! நீங்கள் கேட்ட மாடல் சப்ளை செய்ய இயலவில்லை. இந்த ஆல்பத்திலிருந்து, வேறு ஏதாவது ஒரு மாடலை ரூபாய்க்கு எடுத்துக் கொள்ளுகிறேன்" என்று சொல்லிவிட்டு, தம்மிடமிருந்த ஓர் ஆல்பத்தைக் காட்டினார். விதம் விதமான சோஃபா செட்கள், டைனிங் டேபிள்கள், ஷோகேஸ்களின் புகைப் படங்கள் அதில் இருந்தன. வீட்டுக்காரர், தமக்குப் பிடித்த மாடலைத் தேர்ந்தெடுத்தவுடன், "இதன் விலை பத்தாயிரம். உங்கள் பழைய சோபா செட்டின் மதிப்பு மூவாயிரம். ஆக, தேர்ந்தெடுங்கள். உடனே டெலிவரி செய்து விடலாம்" என்றார்

ஏற்கெனவே ஒரு வார காலம் வீட்டில் சோஃபாசெட் இல்லாமல் திண்டாட்டம். முன்பு தேர்ந்தெடுத்த மாடல்தான் வேண்டும் என்று பிடிவாதம் பிடித்தால், மேலும் தாமதம்தான் ஆகும். அதுமட்டுமின்றி, ஏழாயிரம் ரூபாய் வேறு கொடுத்தாகிவிட்டது. இனிமேல் அந்தப் பணத்தைத் இரும்பப்பெறுவது என்பது இய

லாத காரியம் என்று புரிந்து கொண்டு, வீட்டுக்காரர் வேறு ஒரு மாடல் சோஃபா செட்டை ஓ.கே. செய்தார். அதுவும் குறித்த நேரத்தில் டெலிவரி செய்யப் படவில்லை.

வீட்டுக்காரர் அடையாறில்



இருக்கும் சி.ஏ.ஜி. என்கிற கன்ஸ்யூமர் அமைப்பில் புகார் கொடுத்தார். இதில் விசேஷம் என்னவென்றால், அந்த ஒரு வார காலத்தில் மட்டும், இதேபோல ஏறத் தாழ பத்துப் பேர் அங்கே புகார் கொடுத்திருக்கிறார்கள். சி.ஏ.ஜியின் ஆலோசனையின் பேரில் போலீசில் புகார் கொடுக்கப்பட்டது.

பாதிக்கப்பட்டவர்கள் அனைவரும் அடையாறு, பெசன்ட் நகர், திருவான்மியூர்வாசிகள் என்பதால், அவர்கள் அனைவரும் ஒன்று கூடிப் பேச ஏற்பாடு செய்யப்பட்டது. பாதிக்கப்பட்டவர்களில் ஒருவர் வீட்டில் அனைவரும் கூடினார்கள். அங்கே அவர்களுக்கு ஓர் அதிர்ச்சி காத்திருந்தது.

அவர்கள் சந்திப்புக்கு முந்தைய தினம், சந்திப்பு நிகழவிருந்த வீட்டில் டெலிவரி செய்யப்பட்ட புதிய சோஃபா செட், நிஜத்தில் புதுசு இல்லை. வேறு ஒருவரிடமிருந்து இரண்டாயிரம் ரூபாய்க்கு எடுத்துக் கொள்ளப்பட்ட பழைய சோஃபாசெட். அதை டச் அப் வேலைகள் செய்து, வார்னிஷ் அடித்து, புதுசு போல பன்னிரண்டாயிரத்துக்கு விற்று விட்டார், ஃபர்னிச்சர் எக்ஸ்சேஞ்ச் கில்லாடி.

போலீஸ் புகாரின் பேரில் நடவடிக்கை எடுக்கப்பட்டது. சம்பந்தப்பட்ட பேர்வழியின் முகவரிக்குப் போனபோது, ஒரு கொட்டகை, அங்கே ஒரே ஒரு வேலைக்காரன். அவனது பிரதான வேலை வார்னிஷ் அடிப்பது தான். போலீஸ் தலையீட்டின் பேரில், பாதிக்கப்பட்டவர்களுக்கு, கொடுத்த பணம் திருப்பித்தரப்பட்டது.

விஷயம் அத்துடன் முடியவில்லை. சில தினங்கள் கழித்து, மீண்டும் அதே விளம்பரம். ஏறத்தாழ அதே வாசகங்கள். ஏமாற்றுப் பேர்வழியின் அடுத்த இன்னிங்ஸ்!

கன்ஸ்யூமர் அமைப்பு மறுபடி போலீசில் விவரம் தெரிவித்தபோது கிடைத்த பதில் : பாதிக்கப்பட்டவர்கள் புகார் கொடுத்தால்தான், நடவடிக்கை எடுக்க முடியும்.

**- மௌலி**



# நான் இல்லாத போது...

ஊருக்குச் சென்று
பலநாள் கழித்து
வீடு திரும்பினேன்.

வாசலில்
புன்னை மரத்தின் பழுத்த இலைகளை
மாலையின் மஞ்சள் ஒளி
மேலும்
உன்னதமாக்கிக் கொண்டிருந்தது.

ஆவலுடன் அஞ்சல் பெட்டியைத் திறக்க
வண்ணத்துப் பூச்சி ஒன்று
நிதானமாய் வெளியேறியது.

முன் அறைக்குள்
அணில் கடித்த பழங்கள்
சில விழுந்து கிடந்தன.

விட்டு விடுதலையாகி நிற்கும்
சிட்டுக் குருவியோ
கூடு கட்டியிருந்தது
தாழ்வாரத்தில்.

படிப்பறையினுள்
அமானுஷ்ய மௌனம்
பதுங்கிக் கிடந்தது.

கொல்லைப் புறத்தில்
நட்டு வளர்த்த
ரோஜாச் செடியொன்று
மொட்டு விட்டிருந்தது.

இங்கு
நான் இல்லாமலேயே
எவ்வளவு அற்புதமாக
நிகழ்ந்து கொண்டிருக்கின்றன
எல்லாமும்.

- அ.கார்த்திகேயன்

# யுத்தம்

யுத்தங்களே வாழ்க்கை
விதை
மண்ணோடு செய்யும்
யுத்தம்
தன்



முளைக்கு
இடம் கேட்கும்
முதல் யுத்தம்.

முட்டை ஓடு
கவசங்களோடு
குஞ்சு
செய்யும் முதல் யுத்தம்
தடையுடைக்கும்
முதல் யுத்தம்.

தொப்புள் கொடி
சிசுவும்
யுத்தம் செய்து தான்
சுதந்திரக் காற்றைச்
சொந்தமாக்குகிறது.

பிறப்பு யுத்தம்
வாழ்க்கை யுத்தம்
இறப்பு யுத்தம்

சொந்த மண்ணுக்கான
யுத்தத்தை மட்டும்
ஆக்கிரமிப்பினால்
அடக்கிவிட முடியுமா?

- சேவியர்

# சிரித்து வாழ வேண்டும் - 48

# ஜே.கே!

## நாகேஷ்

சில பேர் நமக்கு நேரிடையாக பரிச்சயம் இல்லாதபோதிலும் கூட, மற்றவர்கள் சொல்லக் கேட்டு, அவர்கள் மீது பெரும் மரியாதை ஏற்பட்டு விடும். என்னைப் பொறுத்தவரை, எழுத்தாளர் ஜெயகாந்தன் அந்த ரகத்தைச் சேர்ந்தவர். அவரது எழுத்துகளை நான் அதிக அளவில் படிக்கும் வாய்ப்பு எனக்குக் கிடைக்கவில்லை என்றபோதிலும், திரையக் கூட்டங்களில் அவரது பேச்சைக் கேட்டு ரசித்திருக்கிறேன். இவ்வளவு துணிச்சலுடன், பட்டுக் கத்தரித்தாற் போல பேசுகிறாரே என்று பிரமித்துப் போயிருக்கிறேன்.

ஒரு தடவை, வடசென்னையையும் தாண்டி ஏதோ இடத்தில் ஜே.கே.வின் மீட்டிங். அவர் என்னையும் அழைத்துக் கொண்டு தம்முடைய ஹெரால்டு காரில் அந்தக் கூட்டத்துக்குச் சென்றார். போகிறோம், போகிறோம், போய்க் கொண்டே இருக்கிறோம். எந்த இடத்தில் கூட்டம் என்று சரியாகத் தெரியவில்லை. வழியில் ஓர் இடத்தில் காரை நிறுத்தி, அங்கிருந்த நடுத்தர வயது மனிதர் ஒருவரிடம், "இங்கே ஜெயகாந்தன் ஒரு கூட்டத்தில் பேசுகிறாரே!" என்றதும், "அதெல்லாம் எனக்குத் தெரியாது!" என்று சொல்லி விட்டார்.

இன்னும் சற்றுத் தூரம் போனதும், ஜே.கே. காரை நிறுத்தி, அங்கே மாடு மேய்த்துக் . கொண்டிருந்த சிறுவனிடம் "ஜெயகாந்தன்னு ஒருத்தர் பேசுற மீட்டிங் நடக்குதாமே! எங்கே அது?" என்று கேட்க, அந்த மாடு மேய்க்கிற சிறுவன், ஒரு திசையில் பாதையைக் காட்டி, "இப்படியே போனா, கடைசியில மீட்டிங் நடக்குது" என்றான். அவன் காட்டிய வழியில் போன நாங்கள், கூட்டம் நடக்கிற இடத்தை அடைந்தோம். எனக்கு இது சற்றே விசித்திரமாக இருந்தது.

அங்கே போனதும்





* 'எதிர்நீச்சல்' படத்தில்...
நன்றி: ஃபிலிம் நியூஸ் ஆனந்தன்

நிகழ்ச்சி ஆரம்பமானது. மைக்கைப் பிடித்தார் ஜே.கே. "தலைவர் அவர்களே..." என்கிற சம்பிரதாயமெல்லாம் கிடையாது. நேரடியாகப் பேச்சை ஆரம்பித்து விட்டார். ஓர் அரசியல் தலைவரின் பெயரைக் குறிப்பிட்டு, "அவர் காமராஜரை முட்டாள் என்று சொல்லுகிறார். நான் சொல்கிறேன். காமராஜரைப் பற்றி இப்படிச் சொல்லுகிற அவர்தான் முட்டாள்!" என்றவுடன், எனக்கு பகீர் என்றாகி விட்டது.

பேச்சிலும் சரி, எழுத்திலும் சரி ஜே.கே.வின் ஸ்பெஷாலிடியே, எங்கே எந்த வார்த்தையை எப்படிப் பயன்படுத்த வேண்டுமோ, அங்கே அப்படிக் கச்சிதமாகப் பயன்படுத்துவார். அப்படிப்பட்ட வார்த்தைகளை அவர் தேடிக் கொண்டிருக்க மாட்டார். வார்த்தைகள் அவரது வாயிலிருந்தும், பேனாவிலிருந்தும், சரளமாய் வந்து விழுந்து கொண்டே இருக்கும்.

# இஷ்... அஷ்!

சுஷ்மிதா சென், சுயசரிதையை வேக வேகமாக எழுதிக் கொண்டிருக்கிறார். உள்ளதை உள்ளபடி, ஒளிக்காமல் அப்படியே விண்டு வைக்கும் குணம் கொண்டவர் சுஷ் என்பதால், பாலிவுட்டில் பல பிரமுகர்களுக்கு வயிற்றில் புளியோதரையே கலக்குகிறதாம்!

ஆழ்வார்ப்பேட்டை, மௌபரீஸ் ரோடில் ஒரு மாடியில் அவரது அலுவலகம் இருக்கும். அதைச் செல்லமாக 'மடம்' என்றுதான் ஜே.கே. மட்டுமின்றி, அவரது நண்பர்களும், சீடர்களும் கூடச் சொல்லுவார்கள். அங்கே நான் பல நாட்கள் சென்றிருக்கிறேன். நான் வாய்திறந்து சில வார்த்தைகள் பேசினாலே அதிகம். ஜே.கே. பேசுவதைக் கேட்டுக் கொண்டே இருப்பேன். சில தினங்களில் ஐந்தாறு மணி நேரம் கூட, நான் வாய் மூடி மௌனமாய் அமர்ந்து கொண்டு, அவரது பேச்சைக் கேட்டது உண்டு.

ஒருநாள் நான் மடத்திற்குப் போயிருந்த போது, அங்கே ஜே.கே. தலைப்பாகை கட்டிக் கொண்டு, நாற்காலியில் அமர்ந்து ஏதோ பேசியபடியே, மீசையை முறுக்கிக் கொண்டிருந்தார். அப்போது, சில கல்லூரி மாணவர்கள் அங்கே வந்து ஜே.கே.விடமே, "ஜெயகாந்தன் இருக்காரா?" என்று கேட்டனர். ஜே.கே. தம் தலைப்பாகையை அவிழ்த்து, துண்டைத் தோளில் போட்டுக் கொண்டு,

"ம். நான்தான் ஜெயகாந்தன். என்ன வேணும் உங்களுக்கு?" என்று கேட்க, அவர்கள் ஓர் அரசியல் தலைவரின் பெயரைக் குறிப்பிட்டு, அவரது பிறந்த நாள் விழாவை எங்கள் கல்லூரியில் கொண்டாடப் போகிறோம். அந்த நிகழ்ச்சிக்கு நீங்கள் சிறப்பு விருந்தினராக வர வேண்டும் என்று கேட்டுக் கொண்டனர்.

ஒரு பையனைப் பார்த்து, ஜே.கே. "நீ எப்போ பிறந்தே?"

பையன் தன் பிறந்த நாளைச் சொன்னான்.

"உன் அப்பா?"

அதிருஷ்டவசமாய் அதற்கும் பதிலைச் சொல்லி விட்டான்.

"உன் தாத்தா?"

"அவரு..." இழுத்தான் பையன்.

"உன் தாத்தாவோட பிறந்த நாள் உனக்குத் தெரியலை. அரசியல்வாதியோட பிறந்த நாளைக் கொண்டாட வந்திட்டீங்களா? முதல்ல போய் உங்களைப் பத்தி நல்லா தெரிஞ்சுக்கோங்க"ன்னு ஒரு சத்தம் போட்டார் பாருங்கள், வந்த மாணவர்கள் சட்டென்று அங்கிருந்து மறைந்து போனார்கள்.

எனது நாடகத்தைப் பாராட்டி இரண்டு வார்த்தை சொன்னால், அது எவ்வளவு பெரிய விஷயம் என்று நான் நினைத்து அவரை அழைத்தேன்.

ஜே.கே.வும் என் அழைப்பை ஏற்று, ஒரு நாள் 'எதிர்நீச்சல்' நாடகத்தைப் பார்க்க வந்தார். நாடகத்தைப் பார்த்து விட்டு, "எனது யாருக்காக அழுதான் கதைக்கும், எதிர்நீச்சல் நாடகத்துக்கும் எந்த விதமான சம்பந்தமும் இல்லை" என்று பாலசந்தரிடமும், என்னிடமும் சொன்னார். அதன் பின் என்னோடு நாடகம் பற்றிய தமது கருத்துகளையும் பகிர்ந்து கொண்டார்.

ஜெயகாந்தன் மீது எனக்கு அபார மரியாதையும், மதிப்பும் உண்டு என்றாலும், அவரை நான் அது வரை நேரில் பார்த்தது இல்லை. பாலசந்தர் எழுதி, நான் நடித்த 'எதிர்நீச்சல்' நாடகம் நடந்து கொண்டிருந்த சமயம், நான் அவரைப் பார்த்துப் பேச வேண்டும் என்று ஆசைப்பட்டேன். காலையில் போனால்தான் வீட்டில் அவரைப் பார்க்க முடியும் என்று கேள்விப்பட்டேன். எழும்பூர்ப் பகுதியில் இருந்த அவரது வீட்டுக்கு ஒரு நாள் காலைப் பொழுதில் போய் விட்டேன். மாடியிலிருந்து இறங்கி வந்தார். இருவரும் காப்பி சாப்பிட்டோம். மேடை நாடகங்களில் சிறப்பாக நடித்து புகழ்பெற்றிருப்பதற்காக என்னைப் பாராட்டினார். நான் அவரை 'எதிர்நீச்சல்' நாடகத்தைப் பார்க்க வர வேண்டும்' என்று அழைத்தேன்.

'எதிர்நீச்சல்' நாடகம் பலதரப்பினரது பாராட்டையும் பெற்றிருந்தது. ஆனால், அந்த நாடகம், ஜெயகாந்தன் எழுதிய 'யாருக்காக அழுதான்?' கதையைக் காப்பியடித்து எழுதப்பட்டிருப்பதாக யாரோ அவரிடம் போய்ச் சொல்லி இருக்கிறார்கள். இது எனக்குத் தெரியாது. நான் மிகவும் மதிக்கும் ஜெயகாந்தனே

பின்னர், 'யாருக்காக அழுதான்?' படமாக எடுக்கப்பட்டது. அதில் நானும் நடித்தேன். அப்போது நான் பிஸியாக இருந்த காலகட்டம். என் சௌகரியத்துக்காகவே, அந்தப் படத்தின் ஷூட்டிங்கை, பெரும்பாலும் இரவு நேரத்தில் வைத்துக் கொண்டார்கள். அந்தப் படப்பிடிப்பின் போதுதான் நானும், ஜே.கே.வும் மிக நெருக்கமானோம்.

அந்தப் படப்பிடிப்பின் அனுபவங்கள் பலதரப்பட்டவை. தாம் சினிமா உலகைப் பற்றி நன்றாகப் புரிந்து கொள்ளவும், சினிமா உலகம் தம்மைப் பற்றி நன்றாக அறிந்து கொள்ளவும், அந்த அனுபவங்கள் உதவியதாக ஜே.கே. சொல்லுவதுண்டு. எப்போது ஜே.கே.வும் நானும் சந்தித்துக் கொண்டாலும், பழைய நினைவுகளை சந்தோஷமாக அசை போடுவோம். ஜே.கே. முரட்டுத்தனமான மனிதர் என்ற இமேஜ் பொதுவாகவே உண்டு. நானும் அவரைப் பற்றி அப்படித்தான் நினைத்துக் கொண்டிருந்திருக்கிறேன். அதற்குக் காரணமான ஒரு சம்பவம் அடுத்த இதழில்...

(சிரிப்பு தொடரும்)

# நீயா — நானா

திருநெல்வேலியில் போய் நின்று "நாங்குநேரி ஹைடெக் பார்க்'' என்ற சொற்களை யாராவது உதிர்த்தால், முடிந் தது. சர்க்கஸ் பஃபூனைப் பார்ப்பது போல அவரைக் கேலியாக பார்ப்பார்கள். ஆனால் சமீபத்தில், நெல் லைக்கு வந்த மத்திய வர்த் தக மற்றும் தொழில்துறை இணை அமைச்சர் ஈ.வி.கே. எஸ். இளங்கோவன், செய்தி யாளர்கள் மத்தியில் பேசும் போது ''நாங்குநேரி உயர் தொழில் நுட்பப் பூங்கா விரைந்து தொடங்கப்பட, மத்திய அரசு எல்லா முயற்சிகளையும் மேற்கொள் ளும்'' என்று அறிவித்திருந்தார். இதை நம்பிக்கை யோடு பார்க்கிறார்கள். காரணம், பல ஆயிரம் கோடி அந்நிய முதலீட்டை ஈர்க்கும் வாய்ப்புகள் நிறைந்த இந்த மெகா திட்டத்தால், தமிழகத்தின் பின்தங்கிய தென்பகுதி இளைஞர்கள் இருபத் தைந்தாயிரம் பேருக்கு நேரடியாகவும், ஐம்பதாயிரம் பேருக்கு மறைமுகமாகவும் வேலை கிடைக்கும் என்பதுதான். இது மத்திய, மாநில அரசுகள் இணைந்து செயல்படுத்த வேண்டிய திட்டம். ஆனால் அரசியல் காழ்ப்புணர்வு காரணமாக, சுணங்கிப் போனது. இப்போது மத்திய அரசு தூசு தட்டி இதற்கு உயிர் கொடுக்க முனைந்திருக்கும் வேளையில், மாநில அரசு தனது ஈகோவை ஓரம் கட்டிவிட்டு ஒத்துழைக்குமா என்பதுதான், இப் போதைய பெரிய கேள்வி என்கிறார்கள் நாங்குநேரி மக்கள்.

நீயா, நானா?' ஈகோ போருக்கு இளங்கோவன் பலியாக மாட்டார். இதற்காக அவர் முதல்வர் ஜெயலலிதாவைச் சந்திக்கத் தயங்க மாட்டார் என எல்லோரும் நம்பும் வேளையில், "அ.தி.மு.க. அரசு உயர் தொழில் நுட்ப பூங்கா விவகாரத்தில் ஆரம் பம் தொட்டே ஆர்வம் காட்டத் தவறி விட்டது. காரணம், அது முன்னாள் மத்திய வர்த்தக

• ஈ.வி.கே.எஸ். இளங்கோவன்



# யுத்தம்



• அப்பாவு

அமைச்சர் முரசொலி மாறனால் விதை போடப்பட்டது" என்று குற்றம் சாட்டுகிறார், நாங்குநேரியை அடுத்த இராதாபுரம் சட்டமன்ற உறுப்பினரான அப்பாவு. இவரது குற்றச்சாட்டுக்கு முன்பு ஒரு சின்ன ஃப்ளாஷ்பேக்.

**மா**றன் மத்திய அமைச்சராக இருந்தபோது 'ஸ்பெஷல் எகனாமிக் ஸோன்ஸ்' என்ற இரண்டு பெரிய உயர் தொழில் நுட்பப் பூங்கா திட்டங்களை தமிழகத்திற்கு ஒன்றும், குஜராத்துக்கு ஒன்றுமாக அறிவித்தார். இதற்காக திருநெல்வேலி - கன்னியாகுமரி தேசிய நெடுஞ்சாலையில் உள்ள வாகைக்குளம் கிராமத்தை ஒட்டி, சாலையின் மேற்குப்புறத்தில் முதல் கட்டமாக இரண்டாயிரம் ஏக்கர் புறம்போக்கு நிலம் ஆர்ஜிதம் செய்யப்பட்டது. மேலும் ஆயிரத்து ஐந்நூறு ஏக்கர் பட்டாநிலம் தேர்வு செய்யப்பட்டுள்ளது. முதல் கட்டமாக ஆர்ஜிதம் செய்யப்பட்ட நிலத்தைச் சுற்றி இரும்பு முள்வேலி அமைக்கப்பட்டதோடு சரி. இந்த நிலத்தில் சாலை மற்றும் குடிநீர் வசதி ஏற்படுத்த, அன்றைய ஐக்கிய முன்னணி அரசு இருபத்தைந்து கோடியை ஒதுக்கியது. ஆனால் திட்டத்தின் பணிகளைத் தொடங்குவதற்கு முன்பாகவே மத்தியிலும், மாநிலத்திலும் ஆட்சி மாற்றம் ஏற்பட்டு, திட்டம் கிடப்பில் போடப்பட்டது.

"2001 - தேர்தலில் ஆட்சிக்கு வந்த அ.தி.மு.க. அரசு, 'நாங்குநேரி ஹைடெக் பார்க்' என்ற பெயரை ATMAC என்று பெயர் மாற்றம் செய்வதில் ஆர்வம் காட்டியது. அடுத்து கனடாவைச் சேர்ந்த ஒரே ஒரு தொழில் அதிபரோடு, பரஸ்பர ஒத்துழைப்பு ஒப்பந்தம் செய்து கொண்டார் முதல்வர். அதன் பிறகு நாங்குநேரி தொழில்நுட்பப் பூங்கா என்ற வார்த்தையைக்கூட அ.தி.மு.க அரசு உச்சரிக்கவில்லை" என்று சொல்கிறார் அப்பாவு. இங்கே தொழில் நுட்பப் பூங்கா கொண்டு வரப்படுமானால், வாகைக்குளத்தில் விமான நிலையமும்

## —மீண்டும் நாங்குநேரிப் பூங்கா

கொண்டு வந்தாக வேண்டும். தூத்துக்குடி, தென்காசி, கன்னியாகுமரி, நாகர்கோவில், திருநெல்வேலி போன்ற தென் மாவட்ட நகரங்கள் அனைத்திற்கும் மையமான இடமாக இது இருக்கும். இது தவிர, தூத்துக்குடியை இணைக்கும் நான்கு வழி புறவழிச் சாலையும் கொண்டு வரப்படும். இதனால் நெல்லை, குமரி, தூத்துக்குடி மாவட்டங்களின் பொருளாதாரம் பெருகும்" என்று சொல்லும் அப்பாவு "கணிப்பொறி மற்றும் எலெக்ட்ரானிக் பொறியியல் பட்டதாரிகள் இந்த மூன்று மாவட்டங்களிலுமே அதிகம். மனித வளத்துக்காக வெளிநாட்டு நிறுவனங்கள் அலைய வேண்டிய தில்லை" என்கிறார்.

மேலும் "இந்தப் பூங்காவின் உள்கட்டமைப்பு வசதிகளை உருவாக்க, அதிக அளவு ஆற்று மணல் தேவைப்படும். பூங்காவுக்காக ஒதுக்கப்பட்ட இடத்தை ஒட்டியுள்ள நம்பியாற்றில், ஆளுங்கட்சி செல்வாக்கு உள்ள ஆட்கள், பர்மிட் இல்லாமலும், போலி பர்மிட் மூலமாகவும் தினசரி நூற்றுக்கணக்கான லாரிகளில் மணலைக் கடத்தி கேரளத்துக்குக் கொண்டு சென்று விற்கிறார்கள். அங்கே மணலுக்கு நல்ல விலை கிடைக்கிறது. இப்படியே இந்த ஆற்று மணலைச் சுரண்டிக் கொண்டிருந்தால், இந்தப் பகுதியில் நிலத்தடி நீர் மட்டம் குறைந்துவிடும். நாங்குநேரி தொழில் நுட்பப் பூங்காவுக்கு இது பெரிய பிரச்னையாக அமைந்து விடும். மணல் கொள்ளையை அரசு உடனே தடுத்து நிறுத்த வேண்டும்" என்கிறார்.

மத்திய நிதி அமைச்சராக ப. சிதம்பரம், பொறுப்பு வகிப்பதால், நாங்குநேரிப் பூங்கா திட்டத்தை விரைவுபடுத்த, கூடுதல் அனுகூலம் ஏற்பட்டிருக்கிறது.

இந்தத் திட்டத்திற்குப் புத்துயிரூட்ட முனைந்திருக்கும், மத்திய வர்த்தகம், மற்றும் தொழில்துறை இணை அமைச்சர் ஈ.வி.கே.எஸ். இளங்கோவனை தொலைபேசி மூலம் பிடித்தோம். டெல்லியிலிருந்து பேசினார். "நாங்குநேரி தொழில் நுட்பப் பூங்காவின் தொடக்கக் கட்ட வேலைகள் ஏன் சுணங்கிப் போயின என்ற சர்ச்சைக்குள் நுழைய நான் விரும்பவில்லை. விஷயத்தை நான் ஆக்கபூர்வமாகப் பார்க்க விரும்புகிறேன். இந்தப் பூங்கா விரைவில் செயல்பட, தமிழக அரசின் முழு ஒத்துழைப்பைக் கோருகிறேன். தமிழகத்தை தொழில் மயமாக்கும் முயற்சியில், ஈடுபட்டுள்ளதாக சொல்லிக் கொண்டிருக்கும் தமிழக அரசு, இதற்கான முழு ஒத்துழைப்பைத் தரும் என்று மனப்பூர்வமாக நம்புகிறேன். இந்தப் பூங்காவைப் பயன்படுத்திக் கொள்ள பல வெளிநாட்டு நிறுவனங்கள் மத்திய அரசை அணுகியுள்ளன" என்று சொல்கிறார். "இந்தப் பூங்காவில் தொழில் தொடங்க அணுகும் தொழில் முனைவோர்க்கு வரிச்சலுகை, சுங்கச் சலுகை, மின்சாரச் சலுகை, நில ஆர்ஜிதத்தில் சலுகை போன்ற எல்லாச் சலுகைகளும் வழங்கத் தயார்" என்றும் உறுதிமொழி தரும் அமைச்சர், மத்திய நிதி அமைச்சர் தமிழ்நாட்டைச் சேர்ந்தவர் என்பதால், அவரது ஒத்துழைப்பு இந்தத் திட்டத்திற்கு முழுமையாகக் கிடைக்கும்" என்கிறார்.

- ஜெய்



"வெண்கொற்றக்குடை பிடிக்காமல் வேறு குடை பிடிக்கிறீங்களே, ஏன்?"
"கஜானா சி... வதற்காகத்தான் மன்னா!
...டை பிடித்தால்
...ணம் தரும்!"
...தி வள்ளுவன்

'பா'ன்யன்' தொண்டு நிறுவனத்தின் மூலம் 'மனநிலை பிறழ்ந்து, பின் சரியான' இரு பெண்களுக்கு வேலைவாய்ப்பு அளிக்கப்பட்டதை, சன் நியூஸில் காட்டினார்கள். நடந்தது நிறைவான சம்பவம் என்பதிலோ, சமூகத்துடன் கலந்து பழகும் வாய்ப்பு, சம்பாதிப்பதால் உண்டாகும் தன்னம்பிக்கை ஆகியவை பாஸிட்டிவ்வான விஷயங்கள் என்பதிலோ ஐயமில்லை. ஆனால் அந்த இரு பெண்களையும் சிறு பேட்டி எடுத்து, அனைவருக்கும் அவர்களின் முகங்களையும், கடந்த காலத்தையும் வெளிச்சம் போட்டுக் காட்டியிருக்க வேண்டுமா?

பம்மல் சம்மந்தம் பாடலில் 'ஜடாதரா கடோத்கஜா' பாடலை ஒளிபரப்பினார்கள். வெளிநாட்டில் கமல், சிம்ரன் டூயட் பாட, சிலர் சில்லறைக் காசுகளை வீசி

# ரிமோட்



யெறிவதைக் காட்டி, இதுபோல் தெருவில் பாடி ஆடும் அபத்தத்தை உணர்த்தினார்கள். ஆனால் இதற்காக வெட்கப்படும் இருவரும் தொடர்ந்து அடுத்த பாராவுக்கும் தெருவில் பாடி ஆடிவிட்டுதான் ஓய்கிறார்கள். ஆக, சுயகிண்டலும் ஆச்சு, மசாலா ஐட்டத்தை விடாதபடிக்கும் ஆச்சு.

ரொம்பச் சின்ன வயதிலேயே மந்திரங்கள், ஸ்லோகங்கள் ஆகியவற்றைச் சொன்னால் பெற்றோர் மகிழ்வது வழக்கம். இனி அப்படிச் செய்வார்களா என்பது கேள்விக்குறி. இனி மகிழ்ச்சியோடு பயமும் ஏற்படலாம். சன், ஸ்டார் விஜய் ஆகியவற்றில் ஒளிபரப்பான பேட்டிகளில் கிண்டலான கேள்விகளுக்குக் கூட அசராமல் சேலம் குட்டிசாமி பதிலளித்தது வியப்பு. ''அவர் ஞானிதாங்க. புருஷன் பொஞ்சாதி எப்படி ஒருத்தருக்கொருத்தர் அனுசரணையா நடந்துக்கணும்னு கூடத் தெளிவாச் சொல்றார்'' என்றார் ஒரு பெண்மணி!

## சூறைத் தேங்காய் பரபரப்பு!



குட்டிச் சாமியார் உடைத்தால் எப்போதும் தேங்காய் சரிபாதியாக உடைகிறது என்பது, மற்றொரு பரபரப்பு. எப்படியோ பேட்டிகளில் குறிபார்த்து சூறைத் தேங்காயாக உடைப்பதில் குட்டிச் சாமியார் கெட்டி.

- ஆதர்ஷ்

● க.நா. இராஜேஸ்வரன், மொரட்டுப் பாளையம்

? கிளிண்டனின் வாழ்க்கை வரலாற்று நூலில் உங்களைக் கவர்ந்த விஷயம் என்ன...?

! 'மை லைஃப்' புத்தக அட்டை. அதைத்தானே ஓசியில் பார்க்க முடிந்தது!

● எஸ்.பாலகிருஷ்ணன், மதுரை

? எப்பொழுதும் சிரிச்சுக்கிட்டே சந்தோஷமா இருக்கணும்னா என்ன சார் செய்யணும்...?

! துன்பத்தையும் நஷ்டத்தையும்கூட, இன்பமாகவும் லாபமாகவும் ஏற்கிற மனப்பக்குவம் பெறணும். அதுக்கு என்ன வழி? நீங்க சொல்லுங்களேன்!

● எல். மீனாட்சி சுந்தரம், திருவண்ணாமலை

? ஆன்மிகத்துக்கு லைசென்ஸ் முறை இருந்தால் நல்லது என்கிறாரே ஞானி... சரியா?

! சிவ சிவ! ஏற்கெனவே உள்ள போலிச் சாமியார்கள் போதாதென்று, லஞ்சம் கொடுத்து லைசென்ஸ் பெற்ற போலிச் சாமியார்கள் வேறு நாட்டை ஏமாற்ற ஆரம்பிப்பார்கள்!




# நீங்கள் கேட்டவை

## -தராசு

● க. முத்துக்குமார், வேப்பம்பட்டி புதூர்

? வாரிசு அரசியல் செய்வதில் சிறந்தவர் யார்... கலைஞரா? டாக்டரா?

! இந்தியாவில் எந்த அரசியல்வாதியும் இதில் ஒருவருக்கொருவர் சளைத்தவரல்ல. என்றாலும் குறிப்பிட்டு இருவரைக் கேட்டதால் சொல்கிறேன்: உட்கட்சித் தேர்தல், பொதுத் தேர்தல் மூலம் வாரிசு அரசியலுக்கு ஊக்கம் தரும் கலைஞரைவிட, மகனை மத்திய அமைச்சராக்கி, பிறகு அதிகச் செலவின்றி ராஜ்ய சபா உறுப்பினராக்கிய ராமதாஸின் சிறப்பு ஒருபடி மேல்தான்!

# ஆன்மிகத்துக்கு லைசென்ஸ்



● வரலாற்றுச் சிறப்பு

● டி. சக்திவேல், திருக்கருகாவூர்

? கண்டிப்புடன் நீங்கள் பின்பற்றும் விஷயம் ஏதும்...?

! டெட்லைனுக்கு அரை மணி நேரம் முன்னரேயே மேட்டர் கொடுப்பதுதான்!

● ரா. சாலமோன், ஆலங்குளம்

? தேர்தலில் நின்று தோற்றவர்களுக்கு ஜெயலலிதா, வாரியத் தலைவர் பதவி கொடுத்துள்ளது பற்றி...?

! வாரியத் தலைவர்களாக கட்சிக்காரர்களை நியமிப்பது அடிப்படையிலேயே தவறு. ஆனால், உள்நோக்

கத்துடன் இந்தப் பழக்கம் தொடங்கப்பட்டு ரொம்ப நாளாகிவிட்டது. தோற்றவர்களுக்கு இந்தப் பதவிகளை வினியோகிப்பது, அந்த உள்நோக்கத்துக்கு ரொம்ப உதவும் படியாக இருக்கும்... ரொம்ப ரொம்ப விசுவாசமாக இருப்பார்கள்.

● மு. பெரியசாமி, திருத்துறைப்பூண்டி ❒

? டாக்டர்கள் கூட புகை பிடிக்கிறார்களே...?

! புகைபிடிப்பது மட்டும்தானா..? சில டாக்டர்கள் குடிக்கிறார்கள். சிலர்... வேண்டாமே!... நல்ல பழக்க வழக்கங்களையுடைய, நோயாளியிடம் பரிவு காட்டுகிற டாக்டர், மோசமான பழக்கங்களையுடைய ஸ்பெஷலிஸ்ட்டை விட உயர்ந்தவர் என்று உணர்க.

● இரா. சக்கரபாணி, மதுரை - 7

? இரூரென்று பதினைந்தாயிரம் தற்காலிக அரசு ஊழியர்களைப் பணி நீக்கம் செய்து, அடுத்த இரு நாட்களுக்குள் மீண்டும் அவர்களைப் பணியில் சேர்த்துக் கொண்ட முதல்வரின் செயல் எதைக் காட்டுகிறது...?

! தற்காலிகப் பணியாளராக இருந்தாலும் ஓராண்டுக்கு மேல் பணி நீடித்தால், அது அவர்களுக்குச் சில உரிமைகளைப் பெற வழி வகுக்கும். அதன்மூலம் பணி நிரந்தரமானால் சம்பளம் நிர்ணயிக்கப்படுமாதலால், செலவும் கூடும். இதைத் தவிர்க்கவே வேலை நீக்கம்; மீண்டும் வேலை அமர்த்தல்.

● டி. சுப்ரமணியன், மேலையூர்

? அரசியலுக்கும் கண்ணியத்துக்கும் உள்ள தூரம் எவ்வளவு...?

! பல நட்சத்திரங்கள், இத்தனை ஒளி-ஆண்டுகளுக்கப்பால் இருப்பதாகக் கணக்குப் போட்டுவிட்டார்கள். நீங்கள் கேட்கிற தூரம் infinityதான்.

● ச.ஆர்.கேசவன், கு. கழுகாசலபுரம்

? 'செய்யும் தொழிலே தெய்வம்' என்கிறார்களே... திருட்டு, விபசாரம் - ஆகிய தீய தொழில்களையும் சேர்த்துத்தானா...?

! அவை தொழில்கள் அல்ல; சமூக விரோத காரியங்கள்!

● உ. குணசீலபாண்டியன், இராசபாளையம்

? ராஜாஜி, காமராஜர் போன்றோரோடு அன்புமணியை ஒப்பிட்டு, ராமதாஸ் பேசியிருப்பது குறித்து...?

! அறியாமையால் பேசினால் வருந்தலாம்; அகந்தையால் பேசினால் கோபிக்கலாம்; விதண்டாவாதமாகப் பேசுகிறபோது வேடிக்கையாக இருக்கிறது - சிரித்து விட்டுப் போங்கள்.



* வாரிசு...



* .... வளர்ப்பு!



* 'வாரிய' வழங்கல்!

# முறை இருந்தால்...?

● எஸ்.ஆர். ஸ்வாமி, திருநெல்வேலி - 11

? சமீபத்தில் மனம் தொட்ட விஷயம்?

! பிரதமர் நடத்திய முதல்வர்கள் சந்திப்பில், தமிழக முதல்வர் வழக்கம்போல் ஆப்சென்ட்.

● ஈ.டி. தயாளன், சென்னை - 12

? கண்ணனைப் பற்றி பாடிய பாரதி



* பாரதி...



* .... பொக்கிஷம்!

யார், ஏன் ராமனைப் பற்றிப் பாடவில்லை...?

! ஏன் பாடவில்லை...? அழகாகப் பாடி வைத்திருக்கிறாரே! - அற்புதமான கீர்த்தனை :

சாகா வரமருள்வாய் - ராமா
சதுர்மறை நாதா சரோஜ பாதா!

ராஜ்குமார் பாரதி பாடி, நீங்கள் கேட்டதில்லையோ! இரட்டை இழப்பு உங்களுக்கு!

● காட்டாவூர் இலக்கியன், சென்னை - 52 ★

? உச்ச நீதிமன்ற கண்டனம், வாஜ்பாயின் எதிர்ப்பு, சட்டசபையில் என்பது எம்.எல்.ஏ.க்கள் எதிர்ப்பு - இத்தனையும் மீறி நரேந்திர மோடியைக் காப்பாற்றுவது எது?

! பா.ஜ.க.வின் ஹிந்துத்வ வெறி!

● கே.வி. ராமன், சென்னை - 73

? சென்னையில் பல லட்சம் ரூபாய் மதிப்புள்ள புலித் தோல்களும் மான் கொம்புகளும் சிக்கினவாமே...?

! அதிர்ச்சி தரும் விஷயம். அதனினும் அதிர்ச்சி தரும் விஷயம் - இதுபோல் 'விலங்குகளின் தோல், கொம்பு போன்றவற்றை விற்க வாங்க, தடை உண்டு' என்பது பெரும்பான்மை மக்களுக்குத் தெரியாது என்கிற செய்தி. தெரியாதவர்கள்; தெரிந்தும் புரியாதவர்கள்; புரிந்தும் மதியாதவர்கள் என மூன்று பிரிவினரிடம் அகப்பட்டுக் கொண்டு விலங்குகள் பலியாகின்றன.

● குவளை எழில், சென்னை - 92

? முன்னாள் பிரதமரே வருந்துகிற அளவுக்கு பா.ஜ.க.வினால் அவர் விமர்சனம் செய்யப்படுகிறார் எனில், அங்கு உட்கட்சி ஜனநாயகம் வலுவாக இருக்கிறது என்றுதானே அர்த்தம்...?

! வாஜ்பாயை பலிகடாவாக்க மேற்கொண்ட முயற்சிகளுக்குப் பெயர் உட்கட்சி ஜனநாயகம் அல்ல... ஆரோக்கியமான விவாதங்களுக்கு இடம் அளிப்பதே உட்கட்சி ஜனநாயகம். அதைத்தான் (குஜராத் மீதான விவாதம்) வாஜ்பாய் கோரினார்; மறுக்கப்பட்டது.

● வெ.ந. கிரிதரன், புவனகிரி

? பணம் வரவில்லையென்றால் நல்ல விஷயமானாலும் தொடர்ந்து செய்யாதே என்கிறானே என் நண்பன்... (உம்: எழுத்துத் துறை) அவன் கூறுவது சரியா...?

! எழுத்து அல்லது கலை சார்ந்த படைப்புகள் எல்லாமே உடனடியாக விலை போய்விடமாட்டா. ஆனால் சிறந்த படைப்புக்குப் பனிச்சென்று பரவலான அங்கீகாரமும், பணமும் கிடைக்கும். நம் எழுத்து சிறக்கிற வரை, அல்லது கலை கனிகிற வரை, பொறுமை அவசியம்.

● இரா திலீப், திருச்சி - 14

? ராமதாஸ் - விஜயகாந்த் பிரச்னைக்கு எளிய தீர்வு என்ன...?

! அவரவர் வேலையைப் பார்த்துக் கொண்டு அமைதியாய் இருப்பதுதான்!

❑ ரூ.100 பரிசு பெறுபவர் :
மு.பெரியசாமி, பரமேஸ்வரன் தெரு,
விட்டுக்கட்டி - 614 715
திருத்துறைப்பூண்டி வட்டம்,
திருவாரூர் மாவட்டம்

★ ரூ.50 பரிசு பெறுபவர் :
காட்டாவூர் இலக்கியன்,
5, சக்திகான் மேஸ்திரி தெரு,
செங்குன்றம்,
சென்னை - 52



வலைபாயுதே

# இங்கிலீஷ் மேடி

அடுத்ததாக உலகமே கொண்டாட ஒரு படம் வந்துவிட்டது. ஸ்பைடர் மேன்- 2. இது புதிதாக பல வசூல் ரெக்கார்டுகளை ஏற்படுத்தும் என்கின்றனர். ஸ்டேன் லீ மற்றும் ஸ்டீவ் டிட்கோ ஆகியோரின் காமிக்ஸைத் தழுவி திரைப்படமாக்கப்பட்டுள்ள இப்படம், 2004-ன் சிறந்த அமெரிக்கப் படமாக இருக்குமாம். ஸ்பைடர்மேனின் வலைமூலம் எவ்வளவு டாலரை அள்ளலாம் என காத்திருக்கிறது sony pictures. (www.spider man, sonypictures.com)

(நம்ம ரஜினி ஸ்பைடர் -மேனா நடிச்சா, விட்டதைப் புடிக்கலாம்ல!)

'Best - selling author' என்ற பட்டத்தையும் தட்டிக் கொண்டு விட்டார் பில் கிளிண்டன். அவரது 'My life' புத்தகம் நான்கு லட்சம் பிரதிகளுக்கும் மேல் விற்று விட்டதாம். அடுத்ததாக ஏழரை லட்சம் பிரதிகளுக்கு ஆர்டர் செய்யப்பட்டுள்ளதாம். ஒரு கடைக்கு நேரில் சென்றாராம் கிளிண்டன். அங்கே நான்காயிரத்துக்கும் மேற்பட்ட புத்தகங்களில் கையெழுத்துப் போட்டே களைத்துவிட்டாராம். சொல்வது money.cnn.com

(எல்லாம் 'மோனிகா' தந்த 'மாஸ்' தானுங்கோ!)

'மேடி' இப்போது ஓடிப் போகிறார் ஆங்கிலப் படத்தில் நடிக்க! படம் : Life in Las Vegas டைரக்டர் : ராஜீவ் அன்சல். மலையாளத்திலும் எடுக்கப்படவிருக்கும் இப்படத்தில், மாதவனோடு இணையப் போகிறார் நாசர். தற்கொலைக்கு முயற்சி செய்த இருவர் சந்தித்தபின் நடக்கும் கதையாம் இது, என்கிறது galatta.com.

(மேடி, மணிரத்னம் இனி உங்களை மறந்துடுவாரா?)

**ஜோக் :**

*சர்தார்ஜி தன் நண்பரிடம், ''என் சகோதரிக்குக் குழந்தை பிறந்திருக்கிறது. ஆனால் ஆணா? பெண்ணான்னு நான் கேட்கலை. அதான் குழந்தைக்கு நான் மாமாவா, அத்தையான்னு குழப்பமா இருக்கு''*

**- வித்யன்**

# வலம்புரி முத்து

தாமரை கூடத்தில் இருந்த ஆளுயரக் கண்ணாடியின் முன்னால் நின்றாள். சராசரி உயரம் தான் அவள். அலங்காரம் செய்து கொள்ளத் தெரியாது. காதுக்கு புது மோஸ்தரில் தொங்கட்டானோ, தோடோ அணிந்து கொள்ளத் தெரியாது. அதிகமாகப் பூ வைத்துக் கொள்ள மாட்டாள்.

ஆனால் இப்போது ஒரு சேலை உடுத்திக் கொண்டால்கூட, சேலையின் வர்ணம் கதிருக்குப் பிடிக்க வேண்டுமே என்ற கவலை எழுகிறது. நல்லதாக ஒரு கவிதை படித்தால், அவனிடம் பகிர்ந்து கொள்ள மனம் ஆசைப்படுகிறது.

மெலிதாகக் கண்ணில் மை தீட்டிக் கொண்டாள். கூந்தலைப் படிய வாரிக் கொண்டாள். ஒற்றைச் சரமாய்ப் பூவைச் சூடிக் கொண்டாள். 'அலங்காரத்திற்கு அப்பாற்பட்டவள் பெண்' என அப்பச்சியிடம் வாதாடி இருக்கிறாள். 'அறிவினாலும், செயலினாலுமே அறியப்பட வேண்டியவள்', என விளக்கி இருக்கிறாள். ஆனால் இது என்ன ரசவாதமோ தெரியவில்லை. காதலில் ஆட்கொள்ளப்படும் பொழுது, பார்வை அனைத்தும் அவன் பார்வையாகவும், சொல் அனைத்தும் அவன் சொல்லாகவும், பசி, தாகம், இன்பம், துன்பம் எல்லாமே அவனுடையதாகவும் போல் ஆகி விடுகிறது. எனவேதான் அவன் அழைத்ததும் உலகின் எந்த மூலைக்கு வேண்டுமானாலும் செல்லலாம் என்ற நம்பிக்கை ஏற்பட்டுள்ளது. நல்ல துணை; நல்ல நட்பு; நல்ல காதல்; நல்ல பாதுகாப்பு.

"மதியம் விருந்து சாப்பிட்டுப் போகலாமே தாமரை" என தேனம்மை அழைத்ததையும் மீறி, கால்கள் பரபரத்தன.

"இல்லை! நான் பிறகு சாப்பிடறேன்"

''சட்டென்று தேனம்மை அவள் கைகளைப் பிடித்து, அறையின் மறைவுக்கு தாமரையை இழுத்துச் சென்றாள்.

"சொல்லு தாமரை! ரெண்டு நாளாவே பார்க்கிறேன். உன் கால் ரெண்டும் பூமியில் பதிய மாட்டேங்குது"

"இல்லையே! நல்லாப் பதியுதே" தாமரை சேலை நுனியை கணுக்கால் தெரியுமளவிற்கு உயர்த்திப் பிடித்து பாதங்களைக் காண்பித்தாள். அப்படிச் செய்வதன் மூலம், தேனம்மையின் நேர்க் கேள்வியினால் ஏற்பட்ட முகச் சிவப்பை மறைத்துக் கொள்ள முடிந்தது. காதலிப்பவர்களை எளிதில் அடையாளம் கண்டு கொண்டு விட முடியும். அதிகச் சிரிப்பில்; அதிக வெட்கத்தில்; அதிகப் பரபரப்பில்.

"கதிரேசனா?" என்று நேரிடையாகக் கேட்டே விட்டாள்.

"ஆமாம்"

"இதில் வருத்தப்பட என்ன இருக்கு புள்ள? எனக்கு ஸ்வீட்டேர்ட சொல்ல வேண்டிய விஷயத்தை கண் கலங்கி சொல்ற!"

"மனசுக்குள் ஒரு நடுக்கம் இருந்து கிட்டே இருக்கு தேனு"

"மனசை அலட்டிக்கிடாத. எல்லாம் நல்லவிதமா நடக்கும்"

## சத்தியப்ரியன்

தேனம்மையின் உறவுக்காரப் பெண் ஒருத்தி உள்ளே நுழைந்து.. "ஏஞ்ச.. இங்கன என்ன பண்ணுற? இது யாரு சிநேகிதியா? வா வா! பிள்ளை எடுக்கக் கொடுக்கக் கூப்பிடறாக" என்றாள்.

# 10

மாப்பிள்ளைப் பையன் முத்துராமன், முதல் கட்டில் உட்கார்ந்திருந்தான். வரிசையாக இருபுறமும் மாப்பிள்ளை வீட்டு ஆண்கள். வங்கி அதிகாரி என்பதில்



அவன் முகத்தில் பெருமையும், கர்வமும். டர்பன், ஸில்க் கோட்டு, ஆள் நெரிசல் காரணமாக அவன் மேல் வியர்வை வழிந்தோடியது. மாப்பிள்ளையின் அண்ணன், பக்கத்தில் அமர்ந்து பர்மா விசிறியால் விசிற, ' விடுங்கண்ணே' என அவன் மறுத்துக் கொண்டிருந்தான். தேனம்மை வீட்டுப் பெரியவர்களும், சம்பந்திமார்களின் அருகில் வந்து அமர்ந்தனர். தேனம்மையின் நீள் விழி கள் நிலம் பார்க்க, நெஞ்சம் முழுவதும் கொண்டவனைப் பார்க்க, கைகளில் நல்ல சிவந்த நிறப் பட்டுப்புடைவையில் மூடி வைத்த அம்பிக் குழவியை ஏந்திய படி வந்தாள். அமர்ந்திருந்த பெரியவர் கள் கைகளில் குழவியைக் கொடுத்து, விழுந்து வணங்கினாள். ஒரு நொடியில் கண்கள் முத்துராமனின் கண்களுடன் சிக்கிக் கொண்டு, கழற்ற இயலா வளை யல்களைப் போல அல்லாடி மீண்டன.

கதிரேசன் கூட்டத்திலிருந்து எழுந் தான். அவன் உயரம், ஆகிருதி எல்லாம் தாமரையின் பார்வையில் பட்டன. கழனிவாசல் அருகில் தாமரைக்குளம்! மனம் பரபரத்தது. அவன் வெளிவாசல் இறங்கிப் போகும் வரை பார்த்திருந்து விட்டு எழுந்தாள்.

"எங்க போறே? இன்னஞ் செத்த நேரத்தில் கௌம்பிடுவேன்'' கிசுகிசுத் தாள் அண்ணி சீதை.

"அண்ணனைக் கூட்டிக்கினு போங்க அண்ணமுண்டி. பால் பழம் சாப்பிட தேனம்மை அவுக ஆயா வீட்டுக்குப் போற வரையில் இருந்துட்டுத் தான் வரப் போறேன்''

சீதை முகம் சுளித்தாள். தாமரை பொருட்படுத்தாமல் வாசலுக்கு விரைந்தாள்.

"ஆம்பிளையாளுங்க விசுக்கு, விசுக்குன்னு வெரசா ஓடிடுவீங்க. நாங்க வீக்கர் செக்ஸ். ஓட முடியாது வேகமா'' என மூச்சு வாங்கியபடி சொன்னாள் தாமரை.

" வீதியில உன் கையைப் பிடிச்சுக்கினு நடக்க எனக்கும் ஆசைதான். பைக்குல பின்னாடி ஒக்கார வெச்சுக்கிட்டு, குன் னக்குடி, பிள்ளையார்பட்டி எல்லாம் போயிட்டு வர ஆசைதான். ஆனா முறையா எல்லாம் பேசி முடியனு மில்ல? திருட்டு மாங்காய, பயத்தோட சாப்பிட்டாத்தான் ருசி''

கதிரேசனை வியப்புடன் பார்த்தாள்.

"என்ன பார்க்குற?''

"ஆமாம். பார்த்தாக. ஒரு ஆட்டோ வைப் பிடிங்க. நாலு பேரு கண்ணுல விளுந்து எந்திரிக்கறதுக்குள்ள, ஏதோ தாமரைக்குளம்னீகளே, அது எப்படி இருக்குன்னு பார்ப்போம்.''

''நடந்து போயிரலாம். ஆட் டோன்னா பதினஞ்சு ரூவாய்க்குக் கொறஞ்சு வர மாட்டான்.''

"செட்டியாரு, பொண்டாட்டிக்கு செலவு செய்யக் கஞ்சத்தனம் காட்டக்




கூடாது''

"நீ பெண்டாட்டி இல்ல''

"பின்ன?''

"லவ்வர்'' சொல்லும்பொழுது கதி ரேசனின் முகம் பிரகாசமானது. அவளை சேர்த்து அணைத்துக் கொள்ள வேண்டும் என ஒரு தாபம் எழுந்தது.

வீதியோடு போன ஆட்டோ ஒன்றை நிறுத்தி ஏறிக் கொண்டான். தாமரை ஏறும்பொழுது, பின்னால் மோட்டார் பைக்கில் திருஞானம் பின்னால் அமர, ஓட்டிக் கொண்டு போன நாகப்பன் பார்வையில் இருவரும் விழுந்தனர்.

"அதளக்கம்மாயை ஒட்டி ஒரு தாம ரைக்குளம் இருக்குமே. அது விரைக்கும் போப்பா'' என்றான் கதிரேசன், ஆட்

டோக்காரனிடம்.

ஆட்டோவில் அவன் அருகில் அமர்ந்திருந்த அவளுடைய உடலில் இலேசான நடுக்கமிருந்தது. மலர்களும், தளிர்களும் அன்னியக் கரம் பட்டதும் தவிக்கும் பதற்றம். அந்த நடுக்கத்தை கதிரேசன் உணர்ந்தான். அவளிடமிருந்து விலகி அமர்ந்தான்.

''தப்பிதமாப் படுதா?'' என்றான் மெல்ல.

'ஆமாம்' என்று தலையாட்டினாள்.

"வண்டியை சத்திரத்திற்கே திருப்பிடச் சொல்லவா?"



'ஊஹூம்' என மறுத்துத் தலையாட்டினாள்.

கதிரேசன் சிரித்தான். தாமரையை இவ்வளவு அண்மையில் பார்த்ததில்லை. இளமையான முகம், வண்டு போன்ற கண்கள், தனித்தனிப் பிரிகளாகத் தெரியும் இமை மயிர், கவிழ்த்த சிப்பியைப் போன்ற இமை, செவ்வகம் போன்ற நெற்றி.. செதுக்கியது போல முகமும், இதழ்களும்.

"என்ன பேசணும்?" என்றாள்.

"எதுவுமே பேசாம இருந்தா, அதுவே நிறையப் பேசின மாதிரி ஆயிராது?"

"திருப்பிச் சொல்லுங்க" என்றாள்.

அவன் திருப்பிச் சொல்லவில்லை. காதல் புரியப்படுவதில்லை, உணரப்படுவது. பழக்கப்பட்ட கைகளால் வரையப்படும் கோலம் போன்றதல்ல. பழக்கப்படாத கண்களால், பார்த்து ரசிக்கப்படும் கோலம் போன்றது.

பாறைகளின் ஊடே, பெரிய மடுவின் அளவிலேயே அந்தக் குளம் இருந்தது. தாமரை இலைகளும், செடிகளும், ஓரிரண்டு விரிந்த பூக்களுமாய் நீர்ப்பரப்பில் தளும்பிக் கொண்டிருந்தன. பெரிய ஆலமரம் ஒன்று கிளைகளையும், விழுதுகளையும் பரப்பி, கரை ஓரமாக நின்றிருந்தது. செவ்வண்ணப் பழங்கள் கீழே உதிர்ந்து கிடந்தன.

"உங்க அப்பச்சி விவரிக்கும் சங்க கால அகப்பாடல்களில் வருவது போல் இல்லை?'' என கதிரேசன் அவள் அருகில் அமர்ந்தான்.

பாறைமீது குதித்துக் கொண்டிருந்த சிறுவர்கள், அந்த இடத்தில் ஒரு ஆணையும், பெண்ணையும் பார்த்த ஆச்சரியத்தில், வெட்கமாகவும், வேடிக்கையாகவும் தங்களுக்குள்ளேயே சிரித்துக் கொண்டனர்.

"எதுக்குக் கூட்டிக்கிட்டு வந்தீங்க?"

"சும்மா"

''இந்த வம்புதானே வேணாம்? அண்ணமுண்டி கண்ணுல மண்ணு தூவிட்டு வாரத்துக்குள்ள பட்ட பாடு எனக்குத்தான் தெரியும்''

"தாமரை! உன்னிடம் ரொம்ப முக்கியமான விஷயம் சொல்லணும்"

"சொல்லுங்க"

"அதுக்கு முன்னாடி சில விஷயங்களைத் தெளிவுபடுத்திக்கிடணும்"

"என்ன?"

"நீ என்னைக் காதலிக்கிற இல்ல?'' என்றான் நேரடியாக.

அவனது கேள்வி அவளை ஸ்தம்பிக்க வைத்தது.

''ஆமாம்'' என்றாள் அவன் கண்களைப் பார்த்து. அவள் கண்கள் இலேசாகக் கலங்கின.

"எனக்கு அரிது எனப்படும் எதையும்விட, உன்னைக் காதலிக்கிறேன்'' என்றான். அவள் தன் கரங்களை நீட்டினாள். அவன் தன் முகத்தை அதில் புதைத்துக் கொண்டான். அவன் உடல்

இலேசாக நடுங்கியது.

"நான் சிதம்பரம் செட்டியாரின் மகன்னு தெரியுமில்ல?"

"தெரியும்"

"ஆனா... ஆனா... நான் தெய்வானை ஆச்சிக்குப் பிறந்தவன் இல்லை" சொல்லி விட்டு, அவள் முகத்தைப் பார்த்தான்.

தாமரையின் முகத்தில் ஒருவிதக் கலவரம் படர்ந்தது.

கதிரேசன் தன் பிறப்பு பற்றிய உண்மையைச் சொன்னான். செட்டியார் வளவில், ஓர் அடிமையைப் போல் நடத்தப்பட்டதைச் சொன்னான். தெய்வானை ஆச்சியின் அளவற்ற அன்பைச் சொன்னான். பங்காளிகளின் பொறாமையைச் சொன்னான். நாகப்பனின் வன்மத்தைச் சொன்னான். அழகப்பனின் அரவணைப்பைச் சொன்னான். ஒரு நற்குடியில் தான் பதியன் போடப்பட்டும், தளிர் விடாமல் இருப்பதைச் சொன்னான்.



"நிஜமா நீ என்னை விரும்புறியா?" "கொப்புடையம்மன் சத்தியமா!"



"இப்ப சொல்லு! தாமரை! நீ என்னைக் காதலிப்பியா?" என்றான்.

"இறுக்காப் பிடிச்சிருக்கு! நீங்க சிதம்பரம் செட்டியார் குடும்பத்தில் பொறந்தவர்; வள்ளி மெடிக்கல்ஸின் பாகதாரார் என்பதினால் உங்களைக் காதலிச்சேன்னு நெனைக்கறீங்களா. உங்களோட எளிமை, நேர்மை இதெல்லாம் தான் காரணம்"

"நெசமாவா?"

"சத்தியம் பண்ணட்டுமா?"

"எந்த வித எதிர்பார்ப்பும் இல்லா அன்பையும், காதலையும் மட்டும், நமது பண்டமாற்றாக வைத்துக் கொள்வோமா?"

"லவ்வுல கூட செட்டி புத்தி" என அவன் தலையில் குட்டினாள்.

"ஸ்ஸ்ஸ்... ஆ" என நடித்தான்.

"கதிர்! வர்ற தைப்பூசத்திற்கு எங்க ஆயா வீடு தேவகோட்டையில இருக்குல்ல, அங்கிருந்து ஒரு வாரம் மிந்தியே பழனிக்கு நடைப்பயணமா போவோம். இந்த வருஷம் நானும் வர்ரேன்னு சொல்லி இருக்கேன். நீங்களும் வர்றீங்களா?"

"நான் டபுள் ரெடிப்பா" என்று கதிரேசன் ஆமோதித்தான்.

"போவோம் கதிர். வீட்டில் தேடுவாங்க."

"நிஜம்மா நீ என்னை விரும்புறியா?"

"கொப்புடையம்மன் சத்தியமா"

"நிரூபி"

"ரத்தத்தில் எழுதிக் கிறது, முடி, நகம் இதையெல்லாம் பத்திரப் படுத்துவது, இதையெல்லாம் கடந்து வந்துட்டோம்னு நினைக்கிறேன்"

"ரோமியோவின் சாளரம் பார்த்து புலம்பிய புல்வெளிப் புலம்பல்களைப் போல, மூர் பரிசாகக் கொடுத்த கைக்குட்டையைப் போல, ராமன் விரட்டிய காகத்தைப் போல, பீமன் தேடிப் போன பாரிஜாதம் போல, காதலுக்கு பைத்தியக்காரத்தனங்கள் வேண்டும் தாமரை"

தாமரை தனது கூந்தலில் செருகியிருந்த கொண்டை ஊசியை வெளியில் எடுத்தாள். ஆலமரத்தின் அடிமரத்தின் முன்பு அமர்ந்தாள். பலம் கொண்ட மட்டும் கொண்டை ஊசியால் 'கதிர்-தாமரை' என பெரிய பெரிய எழுத்துகளால் செதுக்கினாள்.

"நம்ம ரெண்டு பேருக்கும் கல்யாணமாகி, பிள்ளை குட்டிங்க உண்டாகி, அதுக பெரிசாகி இருபது, முப்பது வருஷம் கழிச்சு, இங்கன கூட்டிக்கின்னு வந்து காட்டுவோம்" என்றாள்.

கதிரேசன் தலையாட்டினான். ஆலமரம் சாட்சியாய் சிரித்துக் கொண்டிருந்தது.

(தொடரும்)

'இந்துத்வா' பேசும் சங்கக் குடும்பத்தை விட, ஆத்திகர்களின் எதிர்பார்ப்புக்கு ஏற்றபடி நடந்து, அவர்களின் மனதைக் குளிர்விப்பவர் ஜெயலலிதா தான்" என்று பரவலாக பேசப்பட்டு வரும் காலம் இது- அப்படிப்பட்டவர் 83 சிவாலயங்களில் கும்பாபிஷேகம் நடக்க இருந்ததை தள்ளிப்போட்டு, ஆத்திகர்களின் அடிவயிற்றைக் கலக்கியிருக்கிறார். முறையான காரணம் சொல்லாததால் பத்திரிகைகளும், பக்தர்களும் சகட்டுமேனிக்கு ஊகங்களை அவிழ்த்து விட, ஒரே குழப்பம். இந்த மாதம் நான்காம் தேதி திருவான்மியூர் மருந்தீஸ்வரர் கோயிலிலும், ஐந்தாம் தேதி கபாலீஸ்வரர் கோயிலிலும் கும்பாபிஷேகம் நடத்துவதாக ஏற்பாடு. "இங்கே மருந்தீஸ்வரர் கோயிலில் எல்லாத் திருப்பணிகளும் முடிந்து விட்டன. நன்கொடை கொடுத்த ஆத்திக அன்பர்கள் 'கும்பாபிஷேகத்தை ஆர்வமுடன் எதிர்நோக்கி இருந்தனர். நலிந்த கோயில்களுக்கு ஒரு வேளை பூஜை செய்ய நிதி, பல ஆலயங்களில் அன்னதானம்' என்று பக்தர்கள் மெச்சும்படி செயல்பட்டு வந்த ஜெயலலிதா அரசுக்கு என்ன ஆயிற்று என்றே தெரியவில்லை" என்று



# "ஸ்டாப் சாமி... ஸ்டாப்!"

மருந்தீஸ்வரர் கோயிலில் நம்மிடம் சோகம் தொனிக்கச் சொன்னார் பக்தர் ஒருவர்.

இந்து முன்னணி, வி.ஹெச்.பி. போன்ற ஜெயலலிதா ஆதரவு இந்துத்வா இயக்கங்கள்கூட, தமிழக அரசைக் கண்டித்திருக்கின்றன. 'ஆலயங்களை அரசின் பிடியிலிருந்து விடுவிக்க வேண்டும்' என்ற கோஷம் மீண்டும் எழுந்திருக்கிறது.

தமிழக அரசின் இந்த முடிவுக்கு யார்

## –ஈஸ்வரர்களுக்கு வந்த சோதனை!

காரணம்? என்ன காரணம்? கோட்டையில் விசாரித்ததில், "இந்து அறநிலையத்துறை ஆணையாளர் அலுவலகத்தில் விசாரியுங்கள்'' என்கிறார்கள். அங்கே போனால் "கோட்டையில் கேளுங்கள்" என்கிறார்கள். ஆலய நிர்வாக அதிகாரிகளும், குருக்கள்மார்களும் வாயைத் திறக்கக் கூடாது" என்று எச்சரிக்கப்பட்டிருக்கிறார்கள். ஸீனியர் அமைச்சரின் உதவியாளர் ஒருவர் மருந்தீஸ்வரர் கோயிலுக்கு வந்து, "அம்மா உத்தரவால் தள்ளி வைத்திருக்கிறோம். இது பற்றி யாரிடமும் வாயைத் திறக்கக் கூடாது'' என்று எச்சரித்துவிட்டுப் போயிருக்கிறாராம். ''ஆனி மாதத்திற்குள் (ஜூன் 15லிருந்து ஜூலை 15க்குள்) அனைத்துக் கோயில்களிலும் கும்பாபிஷேகம் நடத்துவதாகத்தான் ஏற்பாடு. ஆனால் இந்த மாதத்தில் கிரகங்களின் நடமாட்டம் சரியில்லாததால், சிவாலயங்களுக்குக் கும்பாபிஷேகம் நடத்தினால் ஆட்சியாளருக்கு நல்லதல்ல" என்று அம்மாவின் கேரள ஜோஸியர் உண்ணி கிருஷ்ணன் பணிக்கர் கூறிவிட்டதால்தான் தள்ளிப் போடப்பட்டுவிட்டது'' என்கிறார்கள். இதுபற்றி ஒரு பத்திரிகையில் ஜோஸியர் சொல்ல, தோட்டத்தில் பற்றிக் கொண்டுவிட்டது. ஜோஸியங்களை நம்புவதும் நம்பாததும் அவரவர் தனி உரிமை. அதில் யாரும் தலையிட முடியாது. ஆனால் ஜோஸ்யர் ஒருவர் சொன்ன கருத்தால் அரசாங்கத்தின் செயல்பாடுகள் பாதிக்கப்படும் அளவுக்கு நிர்வாகத்தில் இருப்பவர் நடந்து கொண்டால், அதைப் பொறுத்துக் கொள்ள முடியாது." நாள், தேதி, நட்சத்திரம், கிரக சஞ்சாரம், ராசி, பொருத்தம், ஸ்வாமி ஜாதகம் என்று எல்லாவிதமான சங்கதிகளையும் கணக்கில் எடுத்துக் கொண்டு, கணித்துதான் தேதியைக் குறித்தோம். ஆனால் இப்போது 'திருப்பணிகள் முடியவில்லை' என்று சொல்லி, தள்ளிப் போடச் சொல்கிறார்கள். பக்தர்களின் கேள்விக் கணைகளில் மாட்டிக் கொண்டு நாங்கள் திண்டாடுகிறோம்'' என்கிறார்கள் கபாலி கோயில் அலுவலர்கள். சில கோயில்களில் யாக குண்டம் அமைத்து யாகம், வேள்வி என்றும் துவங்கி விட்டார்கள். கோபுரத்தின் உச்சியில் வைக்கப்படும் கலசங்களை வைத்து, கலச ஆகர்ஷணம் நடத்தியாகி விட்டதாம். இந்தப் பூஜை செய்துவிட்டால், ஸ்வாமியின் சக்தி, கலசங்களுக்கு வந்துவிடும். இந்த நிலையில் கும்பாபிஷேகத்தைத் தள்ளிப் போடுவதால்தான் ஆட்சியாளர்களுக்கு ஆபத்து என்றும் சொல்கிறார்கள்.

ஜெயலலிதா அரசு நிர்வாக ரீதியாக பல தவறுகளைச் செய்து விட்டு, பெயரை ரிப்பேராக்கிக் கொண்டது ஒரு பக்கம் இருக்க, "ஆட்சியாளர்களின் முடிவுகளில் ஒரு வெளிப்படைத்தன்மை இல்லாததால் சராசரி மனிதனுக்கு எரிச்சல் ஏற்படுகிறது என்பதும் உண்மை. ஆட்சி மீது வெறுப்பு சேருவதைத் தடுக்க



''உங்க தாத்தா சந்தோஷத்துல துள்ளிக் குதிக்கிறாரே... ஏன்?''

''குட்டி சாமியார் அவரை 'குழந்தாய்'னு கூப்பிட்டு ஆசிர்வாதம் கொடுத்தாராம்!''

- வே. ஆறுமுகம்

வேண்டுமானால், அரசின் செயல்பாடுகள் வெளிப்படையானவையாக இருக்க வேண்டும். முன்பு கோயில்களில் இருந்த யானைகளுக்கு ஓய்வு என்று ஊட்டிக்குக் கொண்டு சென்றார்கள். அப்போது ஜெ.வுக்குப் பரிகாரம் செய்ய, 108 யானைகளை வைத்து கஜபூஜை நடத்துவதாக ஒரே பேச்சு. பழநி கோயிலில் நவபாஷாணத்தில் செய்யப்பட்ட மூலவர் பின்னப்பட்டுப் போனதால், வேறொரு பஞ்சலோக சிலையை அதிரடியாக மூலவர்முன் வைத்து, அபிஷேகம் ஆராதனை நடந்தது. "இதுபோல் செய்தது சரியல்ல" என்று ஆத்திகர்கள் அப்போதே குரல் கொடுத்தும், அரசு அசைந்து கொடுக்கவில்லை. இப்போது தோற்றதும், மூலவர் முன் வைக்கப்பட்ட மாற்று மூலவரை எடுத்து விட்டார்கள். "அப்படி வைத்ததும் தவறு. திடீரென எடுத்ததும் தவறு" என்று சிவாச்சாரியார்கள் நொந்து போகிறார்கள்.

கண்ணகி சிலையை ஏன் எடுத்தார்கள்? அதில் உள்ள மர்மம் என்ன? அரசு சொல்லும் காரணங்களை மக்கள் ஏற்றுக் கொள்ள மறுக்கிறார்கள். ஜெயலலிதா அரசு செய்யும் எல்லாக் காரியங்களிலும், ஜோஸியம், ஜாதகம், கிரக சஞ்சாரம், பரிகாரம் ஆகியவற்றின் பங்கீடு இருப்பதாகப் பொதுமக்களிடம் பேச்சு அடிபடுவதைத் தவிர்க்க முடியவில்லை. இப்போது கும்பாபிஷேகங்களைத் தள்ளி வைத்திருக்கிறார்கள். வழக்கம் போல் பல காரணங்கள்.

"இது சாதுக்களுக்கும், சாமியார்களுக்கும், மடாதிபதிகளுக்கும் சாதுர்மாஸ்ய காலகட்டம். இந்த காலகட்டத்தில் ஒரு சந்நியாசி எங்கே தங்கியிருக்கிறார்களோ, அங்கிருந்து குறைந்தது இரண்டு மாத காலம் (முன்பெல்லாம் நான்கு மாத காலம்) வெளியே செல்ல மாட்டார்கள். இந்தக் காலகட்டத்தில் சிவாலயங்களுக்குக் கும்பாபிஷேகம் நடத்தினால், பெரும்பாலான மடாதிபதிகள் கலந்து கொள்ள முடியாததால் தான் தள்ளி வைப்பு என்றும் பேச்சும் அடிபடுகிறது. குறிப்பாக, அரசுக்கு மிகவும் வேண்டியவராகச் சொல்லப்படும் ஒரு மடாதிபதியின் விருப்பத்தில் உண்டான தள்ளிவைப்பு என்றும் சொல்கிறார்கள்.

"கறை படிந்த் அமைச்சர்கள்னு நர்ம'ஆளும் கட்சி'யைக் குறை கூறினது தப்பாப் போச்சு..."

"ஏன்? ஏன்?"

"வாஷிங் அலவன்ஸ்னு மாசம் ஐயாயிரம் ரூபாய் சம்பளத்தோட சேர்த்து வாங்கிக்க ஆரம்பிச்சுட்டாங்க!"

- எஸ். மோகன்



ஆத்திகர்கள் கடும் அதிருப்தியில் இருப்பதை அரசு உணர்ந்திருக்கிறது. 'ஒரு முடிவைத் தந்தால் அதில் உறுதியாக இருப்பார் என்று பெருமை'யைத் தக்க வைத்துக் கொண்டிருந்த ஜெ., தேர்தல் தோல்விக்குப் பிறகு அந்த பெருமையையும் இழந்து நிற்கிறார்.

இந்த நிலையில் திருப்பணி முடிந்த கோயில்களில் "கும்பாபிஷேகங்கள் உடனடியாக நடைபெறும்" என்று தடாலடி அறிவிப்பு தமிழக அரசிடமிருந்து வந்தால்கூட ஆச்சர்யப்படுவதிற்கில்லை.

மாற்றி மாற்றி வந்து கொண்டிருக்கும் அறிவிப்புகளில் கடைசியாக, மயிலை கபாலீஸ்வரர், திருவான்மியூர் மருந்தீஸ்வரர் ஆலயங்களில் அடுத்த ஆண்டு மார்ச் 17ம் தேதியும் மற்ற பதினான்கு ஆலயங்களில் வரும் ஆகஸ்ட் 22ம் தேதியும் கும்பாபிஷேகம் நடத்தப்படும் என்று அரசு தெரிவித்திருக்கிறது.

- ப்ரியன்

படங்கள் : மீடியா ராமு

# நடக்குமென்பார்; நடக்கும்!

### மேஷம்

உங்க ராசியில் ராகுவும் 7ல் கேதுவும் விஜயகாந்த் ரசிகர்களை பா.ம.க. தொண்டர்கள் பார்க்கிற மாதிரி பார்க்கிறதால கொஞ்சம் பிரச்னைகள் வந்து போகும். தெய்வபலமும், தெய்வீக ஈடுபாடும் கூடி நிவாரணமும், துணிவும், நம்பிக்கையும் சேரும். உத்யோகத்தில சக ஊழியர்களோட ஒத்துழைப்பும், சிலருக்கு இடமாற்றமும் ஏற்படும். காண்ட்ராக்ட்ஸ், கெமிக்கல்ஸ், பொன், வெள்ளி ஆபரணம் - தொழில்கள் அனுகூலமா நடக்கும். குடும்பத்திலயும் பூர்வீக சொத்து விவகாரத்திலேயும் அனுகூலமான திருப்பம் உண்டாகும். பெண்களுக்கு உற்சாகம் பெருகும்.

### ரிஷபம்

உற்சாகம் கரைபுரளுகிற வாரம். 'ஊலலல்லா' பாடிக்கிட்டே இருப்பீங்க. ஆரோக்கியம், எடுத்த காரியங்களில் வெற்றின்னு கொண்டாட்டம்தான். உத்தியோகத்தில் ஏற்படுற திருப்பம் அனுகூலமா இருக்கும். யந்திரம், கமிஷன், ஒட்டல், டிராவல்ஸ் தொழில்கள் லாபகரமா நடக்கும். குடும்பத்தில கொஞ்சம் செலவு இட்டங்கள் காத்திருக்கு. தயாரா இருங்க. இதுவரை இருந்த குழப்பங்கள் மறையும். கடுமையான பேச்சு கூடாது. பெண்களுக்கு எண்ணங்கள் ஈடேறும். விசாவுக்கு காத்துகிட்டிருக்கிற மாணவர்களுக்கு நல்ல செய்தி வரும்.

### மிதுனம்

கிரகங்களோட முழு ஆதரவும் இருக்கிறதால "ராஜா கைய வெச்சா..!" தான் எல்லாக் காரியங்களிலும். உத்தியோகத்தில அப்படி இப்படி சின்னச் சின்ன பிரச்னைகள் வந்து போகும். அரசுப் பணியாளர்களுக்கு அனுகூலமான நேரம். வெளியூர்ப் பயணம் ஒண்ணு காத்திருக்கு. கலைத் துறையினருக்கு பெயரும், புகழும் கூடுற சந்தர்ப்பம் கிடைக்கும். யந்திரம், காண்ட்ராக்ட்ஸ், கெமிக்கல்ஸ், மருத்துவம் துறைகளில் இருப்பவங்களுக்கு அனுகூலமான திருப்பங்கள் உண்டாகும். குடும்பத்தில சுபகாரியங்கள் கூடி வரும். பெண்களுக்கு மக்களால் மகிழ்ச்சி ஏற்படும்.

### கடகம்

பகலும் ராத்திரியும் சேர்ந்த நாள் மாதிரி, இன்பமும் துன்பமும் கலந்த பலன்கள்தான் இந்த வாரம். தெளிவான மனநிலையும், நிதானமான சிந்தனையும் உங்க பக்கம் வெற்றிகளைச் சேர்த்திடும். கவலையே வேண்டாம். எதிலும் அவசரம் வேண்டாம். கையிலிருக்கிற பொருள்களை பத்திரமா வெச்சிக்கோங்க. அசட்டையா இருக்காதீங்க. எலக்ட்ரானிக்ஸ், கம்ப்யூட்டர், மருத்துவம், ஆராய்ச்சி - துறைகள் முன்னேற்றமடையும். குடும்பத்



ராஜகுமாரனுக்கு (ரிஷபம்) உற்சாகமான வாரம்னா, தேவயானிக்கு (கும்பம்) மகிழ்ச்சியாதானே இருக்கும்!

தில் சுப காரியங்களால குதூகலம் ஏற்படும். பெண்களுக்கு உல்லாசம், உறவினர் வருகைன்னு சந்தோஷமான நேரம். மாணவர்களுக்கு வெற்றி காத்திருக்கு.

## சிம்மம்

உங்க ராசியை சுக்கிரன் ரொம்ப ஆதரவாப் பார்க்கிறதால, எல்லா வகையிலேயும் ஆதாயமும், அனுகூலமும்தான். வி.ஐ.பி.ங்க ஆதரவும், சரளமான பண நடமாட்டமும் உற்சாகப்படுத்தும். உத்தியோகத்தில உங்க கோரிக்கைகள் கவனிக்கப்பட்டு சாதகமான பலன்கள் கிடைக்கும். புதிய முயற்சி ஏதும் பண்ணறதாயிருந்தா, ஆரம்பிச்சுடுங்க. ஓட்டல், டிராவல்ஸ், பொன் வெள்ளி ஆபரணம், தொழில்கள் லாபம் தரும். குடும்பத்தில மகிழ்ச்சி நிலவும். புதுவீடு வாங்கற யோசனை இருந்தா செயல்படுத்துங்க. பெண்களுக்கு நிம்மதியான வாரம்.

## கன்னி

மெய்யாகவே அதிர்ஷ்ட தேவதை உங்க் பக்கத்தில ஏதோ பெண் ரூபத்தில வந்து சிரிக்குதுங்க. கவனிங்க. புதுமுகம் அறிமுகம் ஒண்ணு காத்திருக்கு. தேவைக்கேற்ற பண வசதி கிடைக்கும். எலக்ட்ரானிக்ஸ், கம்ப்யூட்டர், மருத்துவம், கெமிக்கல்ஸ் துறைகள்ல லாபம் கொழிக்கும். குடும்பத்தில செலவு அதிகமானாலும், வரவேண்டியவை வந்து கை கொடுக்கும். வெளியூர் வெளிநாடுன்னு பிரிஞ்ச போனவங்க திரும்பி வந்து சந்தோஷப் படுத்துவாங்க. குடும்பத்தில நிம்மதி நிலவும்.

## துலாம்

வெற்றி மீது வெற்றி வந்து உங்களைச் சேரும். அதனால உற்சாகம், துணிவு, தன்னம்பிக்கை எல்லாம் கூடும். புதியவர் அறிமுகம், சரளமான பண வசதி உண்டாகும். உத்தியோகத்தில் சின்னச்சின்ன பிரச்னைகள் வந்து போகும். புதிய முயற்சி வெற்றி தரும். காண்ட்ராக்ட்ஸ், கமிஷன், சட்டம், காவல், இராணுவம் துறைகளில் இருப்பவர்களுக்கு உயர்வு தேடிவரும். குடும்பத்தில் புதிய பொருள் சேர்க்கை, ஆபரணம் வாங்குதல் என்று மகிழ்ச்சி நிலவும். பெண்களுக்கு எதிர்பாராத பண வரவும். உடன் பிறந்தவர் ஆதரவும் உண்டாகும்.

## விருச்சிகம்

சர்க்கியூட் தப்பாப்போன ரிமோட் மாதிரி, சேனல்கள் மாத்தி எடுக்குதுங்க இந்த வாரம். கொஞ்சம் பிரச்னைகள், குழப்பங்கள்னு உங்களை டென்ஷனாக்கக் காத்திருக்கு. கவலைப்படாதீங்க. தெய்வ பலம், தெய்வீக ஈடுபாடு கூடி, உங்க கவலைக்கு மருந்து கிடைக்கும் உத்தியோகத்தில் சகஜமா பழகி பிரச்னையில்லாமப் பார்த்துக்கறது நல்லது. புதிய முயற்சி எதுவும் வேண்டாம். இரும்பு, தோல், கெமிக்கல்ஸ், எலக்ட்ரிகல் -

## இது நல்ல நேரம்

| கிழமை | தேதி | நட்சத்திரம் | திதி | மற்றவை |
|---|---|---|---|---|
| புதன் | ஜூலை 7 (ஆனி - 23) | பூரட்டாதி | பஞ்சமி | திருவண்ணாமலை அண்ணாமலையார் உற்சவம் ஆரம்பம் |
| வியாழன் | ஜூலை 8 (ஆனி - 24) | உத்திரட்டாதி | சஷ்டி | சுபமுகூர்த்தம் காலை 8.30 - 10 மனுபோட நல்ல நாள் |
| வெள்ளி | ஜூலை 9 (ஆனி - 25) | ரேவதி | சப்தமி | நாகை நீலாயதாட்சி கோவில் [illegible] பல்லக்கு |
| சனி | ஜூலை 10 (ஆனி - 26) | ரேவதி (தொடர்ச்சி) | அஷ்டமி | |
| ஞாயிறு | ஜூலை 11 (ஆனி - 27) | அசுவினி | நவமி | |
| திங்கள் | ஜூலை 12 (ஆனி 28) | பரணி | தசமி | சிவாலயங்களில் ஆடிப்பூர உற்சவங்கள் ஆரம்பம் கிருத்திகை |
| செவ்வாய் | ஜூலை 13 (ஆனி 29) | கார்த்திகை | ஸர்வஏகாதசி | ஸ்ரீ வில்லிபுத்தூர் ஆண்டாள் உற்சவ ஆரம்பம் |

தொழில்கள் ஏற்றமடையும். அழகு சாதனப் பொருள்களால் அதிக ஆதாயம் கிடைக்கும். குடும்பத்தில் இதுவரை இருந்த குழப்பங்கள் மறைந்து நிம்மதி உண்டாகும். பெண்களுக்கு உடன் பிறந்தவர்களாலும், மக்களாலும் மகிழ்ச்சி உண்டாகும்.

### தனுசு

வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம், ஒவ்வொரு சொல்லும் ஆயுதம். உங்க திறமையும், தெளிவான சிந்தனையும் எல்லாக் காரியங்கள்லேயும் வெற்றி தேடித் தரப் போகுது. இதுவரை இருந்த பண நெருக்கடி, சாதாரண கொசுக்கடியா மாறிடப் போகுது. உத்தியோகத்திலேயும் எல்லாம் அனுகூலமாகவே நடக்கும். புதிய தொழில் தொடங்க சரியான நேரம். காண்ட்ராக்ட்ஸ், கமிஷன், கலைத்துறை, ஆபரணத் தொழில், துறைகளில் அனுகூலமான நேரம். குடும்பத்தில் அமைதி நிலவும். பெண்களுக்கு ஏதோ அதிர்ஷ்டம் ஒண்ணு காத்துக்கிட்டிருக்கு.

### மகரம்

'சிங்கம்போல நடந்து வாரான்'ன்னு பாடினதும் எதிரிங்க ஓடிப் போற மாதிரி, உங்க எதிர்ப்புகள் காணாமப் போயிடும். முக்கியமானவங்க சமயத்தில் உதவிக்கு வருவாங்க. கோர்ட் வழக்கு எல்லாம் தீர்ந்து, நல்லது நடக்கும். உத்தியோகத்திலயும் உங்களுக்குத் தடையா இருந்தவை விலகி வழிவிடும். நீண்டநாள் கோரிக்கை நிறைவேறும். இரும்பு, தோல், எண்ணெய், கெமிக்கல்ஸ் வியாபாரங்கள் அதிக லாபம் தரும். குடும்பத்தில பொருளாதாரச் சிக்கல் தீர்ந்து போய், அனுகூலமான நிலைமை வரும். சுபச் செலவுகள் கொஞ்சம் காத்திருக்கு. பெண்களுக்கு தங்கள் எண்ணம் ஈடேறும்.

### கும்பம்

'அப்படிப் போடு, போடு'ன்னு உற்சாகமான குதியலும், துள்ளலும் போடப் போறீங்க. தாராளமான பண நடமாட்டம், எல்லாக் காரியத்திலேயும் வெற்றி, எதிர்பாரா சந்திப்புன்னு குஷியான வாரம்தான். உத்தியோகத்திலேயும் எல்லாம் அனுகூலமாவே நடக்கும். புதிய முயற்சியில் வெற்றி ரெடியாயிட்டிருக்கு. புத்தகம், பத்திரிகை, நாடகம், கலை, துறைகள்ல இருக்கறவங்களுக்கு ஏற்றம்தான். வெளிநாடு போய்வரும் வாய்ப்பும் வரலாம். குடும்பத்தில் சுபகாரியங்கள் நிகழ்ந்து மகிழ்ச்சி தரும். பெண்களுக்கு மிக மகிழ்ச்சியான வாரம்.

### மீனம்

'எப்படி இருந்த நான் இப்படி ஆயிட்டனே'ன்னு வருத்தப்படாதீங்க. நல்ல நேரம் நெருங்கிட்டிருக்கு. தெய்வ பலத்தை கூட்டிக்க முயற்சி பண்ணுங்க. வார பிற்பகுதியில் நிலைமை சீராயிடும். வெளிநாட்டிலிருந்து நல்ல செய்தி சந்தோஷத்தைக் கொடுக்க வந்துகிட்டே இருக்கு. உத்தியோகத்தில பொதுவா சகஜ நிலை இருக்கற மாதிரி தெரிஞ்சாலும், எதிலும் நிதானமா இருங்க. அவசரப்படாதீங்க. காண்ட்ராக்ட்ஸ், கமிஷன், கெமிக்கல்ஸ், சினிமா, நாடகம், சங்கீதம் துறைகளில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். ரியல் எஸ்டேட் தொழில் லாபம் தரும். குடும்பத்தில் சிறு பிரச்னைகளும், செலவுகளும் வந்து போகும். பெண்களுக்கு ஆரோக்கியத்தில கவனம் தேவை.

ஏழு மாடி ஏறி, கஷ்டப் பட்டுப் பிடித்த புறாவுடன் நட்வர் சிங் வீடு சென்று கதவைத் தட்டினேன்.

"கங்கிராட்ஸ்! இந்தாங்க பிடிங்க, சமாதானப் புறா!"

நட்வர் அதை வாங்கி, நேரு ஸ்டைலில் பறக்க விட்டார். "பஞ்சசீல்..."

"வெல்க!" என்று வாழ்த்தினேன். "அண்டை நாடுகளுடன் அமைதிக்கான முயற்சியில் அபார முன்னேற்றம் போலிருக்கே... ஒரு பக்கம் சிம்லா உணர்வு.. இன்னொரு பக்கம் பஞ்சசீல் கோஷம்!"

"ஆமாம்பா, பழைய கதையெல்லாம் நிறைய நினைவு வருது.."

"அதான் சொன்னீங்களே, ராதாகிருஷ்ணன், மா-சேதுங் கன்னத்தில் தட்டினார்; அவர் திகைத்து நிற்க, ராதா கிருஷ்ணன், "பயப்படாதீங்க, நான் இதே மாதிரி போப் பாண்டவர் கன்னத்தை மட்டுமல்ல, ஸ்டாலின் கன்னத்தையே தட்டியிருக்கேன்' என்றார்!"

'நேரு என்ன செய்தார், தெரியுமோ...'

"தெரியுமே, இந்தி - சீனி பாய் பாய் என்று சூ - யென் லாய் சொன்னதை நம்பி மோசம் போனார்! அந்த மாதிரி இப்பவும் நடந்துடாம கவனமாயிருங்க!"

"என் பேரே நட்டுவார் சிங்! எல்லா நட்டையும் டைட் பண்ணறேன்!"

"74000 சதுர மைல் பரப்பளவுள்ள இந்திய பூமி, இன்னமும் சீனாவின் ஆக்கிரமிப்பில்தான் இருக்கு. மறக்கா தீங்க! நீங்க ஒரு பக்கம் பேச்சுவார்த்தை நடத்தினாலும், மறுபக்கம் பிரணாப் முகர்ஜி உஷாராயிருக்கட்டும்!" என்றேன்.

இஸ்லாமாபாத். "ஜமாலிக்கு கல்தா கொடுத்திட்டீங்க போல..."

"ஆமாப்பா, அவர் ஒண்ணுத்துக்கும் பிரயோஜனமில்லை."

"அதாவது நீங்க ஆட்டி வைக்கிறபடி ஆடற பொம்மையா செயல்படலை! அது சரி, உங்க இஷ்டத்துக்கு அடிக்கடி பிரதமரை மாற்றலாம்னா, அது என்னங்க ஜனநாயகம்?"

"முஷாரஃப் பாணி ஜனநாயகம்!"

"அப்படின்னா P.M என்கிற சுருக்கத்துக்கு அர்த்தமே மாறிடுங்க."

"எப்படி?"

"President's Man!"

"அப்படிப் போடு!" என்று தட்டிக் கொடுத்து, PIA விமானத்தில் ஏற்றி சந்தோஷத்தோடு அனுப்பி வைத்தார் முஷாரஃப்!

டில்லியில் சோனியாஜி ராகுலின் "புதிய" வீட்டைப் பார்வையிட்டு, "இதை அங்க போடு; அது இங்க வரணும்" என்று உத்தரவிட்டுக் கொண்டிருந்தார்.

"பி.ஜே.பி உயர்மட்டக் குழு, பம்பாய் ஏழு நட்சத்திர ஹோட்டலில் கூடி, ஹிந்துத்வாவை விட்டு கொஞ்சம் விலகி வந்ததுதான் தப்பு; மறுபடி தீவிர ஹிந்துத்வா பாதையில்தான் போகணும்'னு முடிவு செய்திருக்கு.."

"அது அவங்க கட்சி விவகாரம்; நோ கமெண்ட்ஸ்!"

"அது சரி, ஆனா, அவங்களோட பிரசாரம் ஜனங்க மத்தியில சுலபமா எடுபடும். மதம் என்கிறது ரொம்ப சக்தி வாய்ந்த டானிக். மதச் சார்பின்மைப் பிரசாரம் அவ்வளவு சாத்தியமானதில்லை... திரும்பினா, சட்ட மன்றத் தேர்தல்கள் வந்துடும்!"

"ஆட்சியை சிங்கிடம் ஒப்படைத்துவிட்டு கட்சியைக்



# செய்திகள், திரிப்பு

கவனின்னு சொல்ல வரே! உன்னோட வழக்கமான பல்லவி... ஹூம்..." என்று பெருமூச்சு விட்டு, நெற்றியைப் பற்றிக் கொண்டார் சோனியா.

"என்னங்க... என்ன ஆச்சு?" என்று கவலையோடு கேட்டேன்.

"கட்சின்னு சொன்னாலே, கேரளா காங்கிரஸ் ஞாபகம் வருது; உடனே தலைவலி பொளக்குது!"

**கை**யோடு கொண்டு போயிருந்த 'டைகர் பாம்' பாட்டிலைப் பரிசளித்து விட்டு, சென்னைக்கு வந்து சேர்ந்தேன். சரவணபவன்



## செம்பியன்!

ராஜகோபால், ரொம்ப நாளைக்கப்புறம் தமது ஹோட்டலின் தயாரிப்புகளை ருசித்துக் கொண்டிருந்தார்.

"எனக்கு ஒரு கப் ஸ்பெஷல் காப்பி மட்டும் போதும்" என்றேன். "பெய்ல்ல ரிலீஸ் ஆகி வந்துட்டீங்க!"

"எல்லாம் முருகன் செயல்" என்று கூறி, பக்கோடாவும் காப்பியும் கொடுத்து உபசரித்தார்.

"ஒரு மைனர் பெண்ணைக் கற்பழித்ததற்காக, மரண தண்டனை பெற்ற தனஞ்ஜெய் சட்டர்ஜி சார்பில் ஒரு கருணை மனு, ஜனாதிபதிகிட்ட இருக்குது. அவருக்கு சிபாரிசு பண்ண ஏற்ற ஆள் நீங்கதான்!"

"எல்லாம் முருகன் சித்தம்!"

"சண்முகா! சரவணா!" என்று வாய் நிறைய அழைத்தபடியே அங்கிருந்து கிளம்பி, வி.பி.ஐ அனுமதி பெற்று, முகமது அலி முன் நின்றேன்.

"**எ**ன்னங்க, இப்படி தமிழக போலீஸ் துறைக்கே பெரிய அவமானத்தைத் தேடித் தந்துட்டீங்க?" என்றேன்.

"மத்தியில் இப்ப தி.மு.க பவர்ஃபுல். எல்லாம் கருணாநிதி பண்ணின வேலை!"

"நீங்க செய்தமாதிரி நள்ளிரவில் கதவைத் தட்டி, அநாகரிகமாக நடந்து கொண்டு அரெஸ்ட் பண்ணலையே உங்களை?"

"என்னைக் கைது பண்ணும்படி நான் ஒரு தப்பும் செய்யலை. வேணும்னா ஸ்டாம்ப் பேப்பரில் எழுதி கையெழுத்துப் போடவும் தயார்!" என்றார் முகமது அலி.

"அதுவாவது போலி பத்திரத் தாளாக இல்லாமல், அசல் ஸ்டாம்ப் பேப்பரா இருக்கட்டும்!"

**இ**ன்டர்நேஷனல் ஃப்ளைட் பிடித்து பாக்தாத் சென்றேன். அதிகாரம் கைமாறிய பிறகும், அமெரிக்கர் கெடுபிடிதான் அதிகம். எப்படியோ அனுமதி பெற்று சதாம் ஹூசேன் முன் நின்றேன்.

"போட்டீங்களே ஒரு போடு! இந்த நீதி விசாரணையே ஒரு நாடகம்! அமெரிக்க அதிபர் ஜார்ஜ் புஷ்தான் உண்மைக் குற்றவாளி...!"

"ஆமாம். என்ன தப்பு? எனக்குச் சொந்தமான நாட்டில் நான் சர்வாதிகாரியா இருந்தபோது, நானே உருவாக்கிய சட்டங்களின்படி நான் எந்தக் குற்றமும் செய்துவிடவில்லை. நல்லாட்சிதான் வழங்கிக் கொண்டிருந்தேன்" என்றார் சதாம், தாடி தடவி.

"உங்களைச் சொல்லி பயனில்லீங்க. உங்களுக்காக வாதாட வழக்கறிஞர்கள் முன் வந்திருக்காங்க, பாருங்க.. அவங்களை முதல்ல கைது பண்ணி உள்ளே தள்ளணும்" என்றேன் கோபமாக.

"அதுக்கு நீ ஒரு சர்வாதிகாரியா மாறணுமே! ஆக மொத்தத்தில் நீயும் என் பக்கம்தான்" என்று சந்தோஷமாக என் கையைக் குலுக்கினார் சதாம்.

அமெரிக்கக் காவலர்கள் சந்தேகப்பட்டு உள்ளே திரும்பிப் பார்க்க, கைகளை உயர்த்திக் காட்டியபடி நழுவினேன். ○



# அண்ணா வழியில் அரசியல்!

கஞோடு போராடி இருக்கிறேன். இதனால் கர்நாடகத்தில் தமிழ்ப் படங்களைத் தடை செய்தார்கள். தமிழ் நடிகர், நடிகைகள் கார்கில் நிதி கொடுத்திருக்கிறோம், இவையெல்லாம் அரசியல் இல்லையா? நடிகர்கள் அரசியல் கட்சி தொடங்கக் கூடாது என்று யாரும் சொல்ல முடியாது. ரொனால்டு ரீகன் தொடங்கி, ஜெயலலிதா வரை திரையுலகிலிருந்து வந்தவர்கள்தாமே? ஏன் டாக்டர் ராமதாஸ் கூட, பாலம் உட்பட மூன்று படங்களில் நடித்திருக்கிறாரே!'' என்று ஒரே போடாகப் போட்ட விஜய் காந்திடம், 'புதுக்கட்சி அறிவிப்பை எப்போது வெளியிடுவீர்கள்?' என்று இட்டத்தட்ட நச்சரிக்கத் தொடங்கினார்கள் நிருபர்கள்.

''அண்ணா தேர்தல் அரசியலில் இறங்கும்முன், ஒரு அட்டைப் பெட்டியை வைத்து, திருச்சி மாநாட்டில் மாவட்ட நிர்வாகிகளை ஓட்டுப் போடச் சொல்லி முடிவெடுத்தாராம். அதுபோலத்தான் மாவட்ட நிர்வாகிகளிடம் கருத்துக் கேட்க, அனைவரையும் அழைத்திருக்கிறேன். நாங்கள் என்ன முடிவு எடுக்கப் போகிறோம், அதை எப்போது அறிவிப்போம் என்பதைச் சொல்ல முடியாது. அடுத்த மாதம் வரும் எனது பிறந்த நாளிலோ, தமிழ்ப்புத்தாண்டிலோ அறிவிக்கலாம். தீவிர அரசியலில் இறங்க வேண்டும் என்ற நிலை வந்தால், தயங்காமல் இறங்கிவிடுவேன்...'' என்றார். சந்திப்பு முடிந்து பத்திரிகையாளர்கள் கலைந்தபோது, 'இவர் அரசியலில் இறங்க வேண்டிய நேரம் இதுதானே?' என்று பரஸ்பரம் கேட்டுக் கொண்டார்கள்.

**வழக்கம் போல இந்த ஆண்டும் இருபத்தைந்து லட்சம் ரூபாய் கல்வி உதவிகளை, ஏழை மாணவ, மாணவிகளுக்கு வழங்க வந்திருந்த விஜய்காந்த் பதினைந்து நாள் மௌனம் கலைத்தார்.**

'அரைவேக்காடு என்று விமர்சித்தது பா.ம.க.வின் ஸ்டைல். நான் பன்னிரண்டு வயதிலிருந்து அரசியலில் இருக்கிறேன். இந்தி எதிர்ப்புப் போராட்டத்தின் போது, ஸ்டேட் டிரான்ஸ்போர்ட் பஸ்களின்மீது தார்பூசி அழித்திருக்கிறேன். தி.மு.க.விலிருந்து அ.தி.மு.க. பிரிந்தபோது, திண்டுக்கல்லில் மாயத் தேவருக்காக தேர்தல் வேலை செய்திருக்கிறேன். உதயசூரியன் கலைக் குழு நடத்தியிருக்கிறேன். எந்தக் கட்சியையும் கூப்பிடாமல், திரைத்துறையின் சார்பில் கலைஞருக்குப் பொன்விழா எடுத்திருக்கிறேன். காவிரித் தண்ணீருக்காக நெய்வேலியில் சக கலைஞர்

**–விஜயகாந்த் உறுதி!**

ஜெய்

படம் : மீடியா ராமு

**கா**ஸ் விலை ஏற்றத்தினால் 'ஃப்யூஸ்' போய்க் கிடக்கும் அப்பாவி பாமர மக்களே!

வட்டி கட்டி வாழும் மகான்களே!
பட்ஜெட் பல 'ஜெட்'டுகளை
நம் மீது ஏவி
ரொட்டித் துண்டுகளாக்க வருகிறது...
தலையில் 'துண்டு' போடத் தயாரா?!

கத்தறவன் கத்துறதெல்லாம்
தேர்தல்ல கேட்டுட்டு,
குத்துறதெல்லாம் வோட்டா
குத்திட்டு,
ஒவ்வொரு முறையும் சரித்திரத்தை
மாத்திறதும் நாமதான்!
அரசாங்கத்தோட தரித்திரத்தை
சுமக்கிறதும் நாமதான்!

எத்தனையோ பட்ஜெட்-
எப்படி எப்படியோ போட்டாலும்
'மாச பட்ஜெட்' பற்றாக்குறையே -
நம்மகிட்டதான்
'வற்றாம' நிறைஞ்சிருக்குமே!

காலையில பல்லை இளிச்சுக்கிட்டு, பிரஷ்ஷோடு கண்ணாடி முன்னால போய் நிக்கறப்போ, 'கோல்கேட்' - 'கோபால் பல்பொடி'யா மாறலாம். 'ஷேவிங் கிரீம்' 'ஸேவிங்ஸ்' கருதி சோப்பு நுரையா மாறலாம். சந்தனம் மணக்கும் சோப்பு டப்பா, சாதா சோப்பைச் சுமக்கலாம். சிக்கனம் கருதி, 'சிக்கன்' கிச்சன் பக்கம் எட்டிப் பார்ப்பதுகூடக் குறையலாம். ஒரு பஞ்சு மிட்டாய் வாங்க - அஞ்சு முறை யோசிக்கலாம். பெட்ரோல் விலையை ஒட்டி, ஓட்டாமல் பைக்கையும் பாதி தூரம் உடன் நடத்திக் கூட்டி வந்து, பின் ஓட்டுவது கூட நடக்கலாம்.

ஏன்னா, நாட்டுல பற்றாக்குறை வற்றுமா?

டெலிஃபோனைக் 'கட்' பண்ணிடலாமான்னு மட்டும் நிணறும்போதும் - செல்ஃபோன் விலை மட்டும் குறையும்!

வி.சி.டி. பிளேயர் விலை குறையும். 'தமிழ்த்திரை' சேனல் வந்திடும்னு மனசு ஆறுதல் சொல்லும். கம்ப்யூட்டர் விலை குறையும். ஆனா அதைவிட கடலைப் பருப்பு விலை கூடியிருக்கும்!

மொத்தத்துல நாம ரேஸ் கோர்ஸ்ல ஓடுற வரிக்குதிரை! நேர்முகவரி, மறைமுக வரி, சுங்க வரி, வருமான வரி எல்லாம் நம்ம மேல கட்டுவாங்க, நாம தோத்துக்கிட்டே இருந்தாலும்கூட!

ஏற்கெனவே உள்ள வரிகளிலேயே நாம இறங்கியிருக்க, அடுத்த வருஷம் இறங்கப் போகுதாம் மதிப்புக் கூட்டப்பட்ட வரி!

மிஸ்டர் பிரம்மா! எங்கள் வாழ்க்கையில் நீ எழுதிய வரிகள் எல்லாம் வொர்ரிகளே!

இதுக்கு மேல என்னத்த எழுத, பேப்பர் விலையும் கூடிடுச்சு! இனிமே



# சிதம்பரம் அண்ணா!

எல்லாத்தையும் மனசுக்குள்ளே நினைச்சுக்க வேண்டியதுதான்!

புலம்பிக் கொட்டினது போதும் இப்படி வான்னு 'மெட்டி ஒலி' கூப்பிடுது - வர்ட்டா!

**- முகில்**

அரவிந்த அமுதம்-14

திருப்பூர் கிருஷ்ணன்

ஒரு முகமதியக் கைதி ராஜத் துரோகக் குற்றம் சாட்டப்பட்ட இளைஞர்களைத் தம் சொந்தக் குழந்தைகளைப் போல் பாவித்து, அவர்களிடம் அன்பு செலுத்தினார். விடை பெறும்போது அவரால் கண்ணீர்ப் பெருக்கைத் தடுக்க முடியவில்லை. 'இவர்களுடைய உன்னதமான தேச பக்தியின் காரணமாகவே, இவர்கள் இவ்வளவு இன்னல்களையும் துக்கங்களையும் சகிக்க வேண்டியிருக்கிறது' என்று அடிக்கடி பிறரிடம் கூறுவார். மேலும் ''இதோ பாருங்கள். இவர்கள் யாவரும் உயர் குடும்பத்தினர். பணக்காரர்களின் புதல்வர்கள். ஏழைகளுக்கும் அல்லல்படுவோருக்கும் உதவி செய்யும் நோக்கத்திற்காகவே, இத்தகைய துயரத்தை ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள்' என்று துக்கத்துடன் கூறுவார்.

('எனது சிறைவாசம்' என்ற நூலில் ஸ்ரீஅரவிந்தர்.)

அரவிந்தரை 'பண்டைக்கால இந்திய மகரிஷிகளின் வாரிசு!' எனப் புகழ்ந்தவர் விவேகானந்தரின் சிஷ்யை நிவேதிதை. தம்மையே பாரத அன்னைக்கு நிவேதனமாக்கிக் கொண்டு வந்தவர். காளியைப் பற்றி ஆங்கிலத்தில் பக்திப் பரவசத்தோடு அவர் எழுதிய நூல், அரவிந்தரால் பெரிதும் போற்றப்பட்டது. விவேகானந்தரின் மறைவுக்குப் பின் அதிகமாக அரசியலில் ஈடுபடலானார். சுதந்திர வீரர்களுக்கு ஆதர்சமானார். அரவிந்தரின் புனிதப் பேரொளியால் கவரப்பட்ட அவர், அரவிந்தரின் விடுதலையை விழா நடத்திக் கொண்டாடினார். அது சரி, அரவிந்தர் விடுதலையானது எப்படி?

அரவிந்த கோஷ், தம்பி பரீந்திர கோஷ் உள்பட மொத்தம் முப்பத்தியேழு பேர், முஸபர்பூர் வெடிகுண்டுச் சதியில் ஈடுபட்டதாகக் குற்றச்சாட்டு. நார்டன் துரை தான் அரசுத் தரப்பு வழக்கறிஞர். சித்தரஞ்சன் தாஸ் அரவிந்தருக்காக வாதாடியவர்.

வழக்கு விசாரணைக்கு வந்தபோது, அரவிந்தரை நீதிபதியின் முன் நிறுத்தினார்கள். கோகுலத்திலும், பிருந்தாவனத்திலும் விளையாடிய கண்ணன்... அரவிந்தரின் ஆருயிர் நண்பன்... என்ன ஆச்சரியம்! வலதுகைப் புல்லாங்குழலை இடது கையில் தட்டியவாறே கம்பீரமாக நடந்து, நீதிமன்றத்திற்கு வருகை புரிந்தான்.

யார் அங்கே! ரத்தினக் கம்பளம் விரியுங்களேன் என் கண்ணனுக்கு. அவன் பட்டுப் பாதங்கள் நோகுமே! வரும் வழியில் கொஞ்சம் தாமரை இதழ்களையோ, ரோஜா இதழ்களையோ தூவி வைக்கக் கூடாதா! தூவுகிறவர்கள் காம்பு நீக்கித் தூவ வேண்டும். பூவின் காம்பு பட்டால் கூட, என் கண்ணனின் மெல்லிய திருப்பாதங்கள் கொப்பளிக்கும்.

அரவிந்தர் மெய்சிலிர்த்தார். அரவிந்தரைப் பார்த்து மயிற்பீலி அசையக் கலகலவென்று சிரித்தான் கண்ணன். இது நீதிமன்றமா ஆயர்பாடியா! சிறைக்குள் வந்த நீ இங்கும் வந்துவிட்டாயா! அப்பாடி! அரவிந்தர்



# சிறையிலிருந்து



நிம்மதிப் பெருமூச்சு விட்டார். அரவிந்தரைப் பார்த்துக் கண்ணைச் சிமிட்டிய கண்ணன் சொன்னான், "பார்! மகனே பார்! நீதிபதியைப் பார்! அரசுத் தரப்பு வழக்கறிஞரைப் பார்! உன் தரப்பில் வாதாடப் போகிறவரையும் பார்!" சொல்லிவிட்டு நகைத்தவாறே மறைந்து போனான், அந்த மாயாஜாலக்காரன்.

கண்களை விரல்களால் தேய்த்துக் கொண்டு, கண்ணன் சொன்னபடியே நீதிபதியைப் பார்த்தார் அரவிந்தர். 'கோட்டும் சூட்டும் அணிந்து கொண்டு... தலையில் ஒரு மயிலிறகைச் சூடிக் கொண்டு... அடேடே! கண்ணனல்லவா நீதிபதி ஸ்தானத்தில் அமர்ந்திருக்கிறான்! என்ன குறும்பு அவன் திருமுகத்தில்! எங்கே எனக்காக வாதாட வந்த சித்தரஞ்சன் தாஸ்? நீர் வாதாடவே வேண்டாம். என் கண்ணன் தான் இங்கே நீதிபதி. தெரியுமா உமக்கு? தாஸைப் பார்த்தார். கிருஷ்ண கிருஷ்ணா! தாஸைக் காணோம். தாஸ் உடையை அணிந்து கொண்டு, அரவிந்தரைப் பார்த்துச் சிரிப்பது கிருஷ்ணனே தான். அரசுத் தரப்பு வழக்கறிஞரான மிஸ்டர் நார்டன் துரை! உம் ஜம்பமெல்லாம் இனிமேல் பலிக்காது. கண்ணனே

வேதா

# விடுதலை!

எனக்காக வாதாடப் போகிறான். தெரியுமா! ஜாக்கிரதையாக இரும். நார்டன் துரையின் பக்கம் திரும்பினார். அவருக்கு மயக்கம் வரும் போலிருந்தது. அங்கே துரையவர்களைக் காணோம்! துரையின் ஆடைகளை அணிந்து கொண்டு கிருஷ்ணன் நகைத்தான். அந்த முக்கியமான வழக்கின் போக்கை அறிய வேண்டிக் குவிந்திருந்த ஆயிரக்கணக்கான பொது மக்களைப் பார்த்தார். எல்லாம் கண்ணனின் முகங்கள். உழைப்பாளிக் கண்ணன், தோட்டிக் கண்ணன், குதிரை வண்டியோட்டும் கண்ணன், போலீஸ் கண்ணன், வயதான கண்ணன், சின்னஞ்சிறு கண்ணன், வேட்டி கட்டிய கண்ணன், சேலை கட்டிய கண்ணன்! அரவிந்தரது விழிகளில் ஆனந்தக் கண்ணீர் குளம் கட்டியது.

மொத்தம் இருநூற்றி எழுபத்தி நான்கு நாட்கள் வழக்கு நடந்தது. தாஸுக்கு உதவக் குறிப்புகள் தயாரித்தார் அரவிந்தர். ஆனால் திடீரென்று அவர் உள்ளிருந்து ஓர் ஆலய மணிக் குரல் ஒலித்தது. எல்லாம் அந்த மாயக்காரன் குரல்தான். கோபிகைகளை மயக்கிய கோவிந்தனின் குரல். குழலால் ஆநிரையை மயக்கியவன், குரலால் அரவிந்தரை மயக்குகிறான். இதை சொன்னவன், சிரித்தவாறே அவருக்குப் பாதை சொன்னான். "அரவிந்தா! வாழ்க்கையைப் பற்றிச் சிந்தி. வழக்கைப் பற்றிச் சிந்திக்காதே. வழக்கை நடத்துபவன் நான். தீர்ப்புச் சொல்லப் போகிறவனும் நானே. யாருக்குத் தேவை உன் குறிப்பு? குறிப்பைக் குப்பையில் போடு. குறிப்பெழுதும் நேரத்தில், மனமெனும் வெள்ளைத் தாளில் இறை நாமத்தை எழுது! என்னைச் சிறையில் நீ தரிசித்தது எவ்வளவு சத்தியமோ, அவ்வளவு சத்தியம் நீ விடுதலை ஆவதும். விடுதலைக்குப் பின் என்ன செய்யப் போகிறாய்? அதைச் சிந்தி. உன் முழுவாழ்வையும் எனக்கே அர்ப்பணிப்பாயாக!"

அப்படியே செய்தார் அரவிந்தர். குறிப்புகளைக் குப்பையில் போட்டார். மரண தண்டனை தரப்படுமோ என மற்றவர் கலங்கித் தவித்த வேளையில், கட்டாயம் விடுதலை ஆவோம் என்ற திடசித்தத்துடன், முறுவல் பூத்தவாறே நீதிமன்றத்தில் நின்றார். அவரது கலக்கமற்ற மனநிலையைக் கண்டு மக்கள் வியந்தார்கள். வழக்கு நடக்கும் போதே பல குறிப்பிடத்தக்க சம்பவங்கள் நடந்தன.

• கைதியாக இருந்த நரேந்திரநாத், அரசுத் தரப்பு உளவாளியானான். இதனால் இரு சக கைதிகளால் கொலையுண்டான். அவனைக் கொலை செய்த கைதிகள் தூக்கிலிடப்பட்டனர்.

• காவல் துறை அதிகாரி பானர்ஜி, அரசுத் தரப்பு சாட்சியாக அழைக்கப்படுவதாக இருந்தது. அவரும் கொலையுண்டார். கொலையாளி கண்டுபிடிக்கப்படவே இல்லை.

• அரசு வழக்கறிஞர்களில் ஒருவரான பாபு ஆசுதோஷ் பிஸ்வாஸ், ஒரு மதிய நேரத்தில் வழக்கு நடக்கும்போதே முதுகில் சுடப்பட்டு மாண்டார். சுட்டவன் தன்னைத் தானே சுட்டுக் கொண்டு இறந்தான்.

• ஷாம்சுல் ஆலம் என்ற இன்னொரு கைதியை ஒருவன் சுட்டுவிட்டு ஓடினான். அவன் பிடிபட்டுத் தூக்கிலிடப்பட்டான்.

• ஸ்ரீ அரவிந்த கோஷ் விசாரணை என்ற திகிலூட்டும் மர்ம நாடகத்தில்,

## அருள்வாக்கு

ஒவ்வொரு காரணத்துக்கும் ஒரு விளைவு இருக்கிறது. பௌதிக விஞ்ஞானம் முழுவதும் இந்தக் காரணம் - விளைவு பற்றிய விதிகளைக் குறித்ததேயாகும். மாற்ற முடியாத இந்த விதிகளாலேயே உலகம் ஒழுங்குடன் இயங்குகிறது. ஏதோ ஒரு பேரறிவு இருப்பதால்தான் இப்படிப்பட்ட விதிகள் உண்டாகி, அவை எல்லாம் ஒழுங்காக இணைந்து, உலக வாழ்வு ஏற்பட்டிருக்கிறது என்று தெரிகிறது. பௌதிக உலகில் காரணம் - விளைவு என்கிற தவிர்க்க முடியாத சங்கிலி இருந்தால் மனித வாழ்க்கையிலும் அது இருந்துதானே ஆக வேண்டும்? நாம் செய்கிற சகல காரியங்களுக்கும் விளைவு இருந்துதான் ஆக வேண்டும். நல்ல காரியங்கள் செய்தால் அதற்குச் சமமான நல்ல விளைவுகளைப் பெறுவோம். கெட்டதைச் செய்தால் அதற்குச் சமமான கெட்ட பலன்களைப் பெறுவோம். இப்படிப் பலனைத் தருகிற 'பலதாதா' தான்

பிரபஞ்சத்தை நடத்தி வைக்கிற மகாசக்தி, ஈசுவரன், பகவான், ஸ்வாமி, கடவுள், பரமாத்மா எனப்பட்டவன்.

மனசு இருக்கிற வரையில் அது சஞ்சலித்துக் கொண்டேதான் இருக்கும். நல்லதோடு கெட்டதையும் நினைக்கத்தான் செய்யும். புண்ணியத்தோடு பாபத்தையும் செய்து கொண்டேயிருக்கும். இந்தப் பாபத்துக்கு விளைவாகக் கஷ்டங்களை நமக்கு ஈசுவரன் தந்து கொண்டுதான் இருப்பான். கஷ்டங்களைப் போக்கடிப்பதற்காகவே பொதுவில் எல்லாரும் பிரார்த்தனை செய்கிறார்கள். இதைத்தான் பக்தி என்று நினைக்கிறார்கள்.



- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

ஏராளமான திருப்பங்கள். எனவே அரசு வழக்கறிஞரான நார்டனுக்கு துப்பாக்கி வைத்துக் கொள்ள அனுமதி வழங்கப்பட்டிருந்தது.

அரவிந்தர் மனைவிக்கு எழுதிய கடிதங்கள் நீதிமன்றத்தில் வாசிக்கப்பட்டன. அதன் வாசகங்களையே சான்று காட்டிய தாஸ், அரவிந்தர் மாபெரும் வேதாந்தி என்றும், வழக்கெல்லாம் முடிந்த பிறகும் அரவிந்தர் காலத்திற்குப் பிறகும் கூட அவர் கொண்டாடப்படுவார் என்றும் அறைகூவினார். அவரது ஆவேசம் நிறைந்த பேச்சுக்குப் பின் நார்டன் துரையின் வாதங்கள் எடுபடவில்லை. 1909 மே 6ம் தேதி, அலிப்பூர் செஷன்ஸ் நீதிபதி மிஸ்டர் பீச்கிராஃப்ட், அரவிந்தர் குற்றமற்றவர் என தீர்ப்பளித்தார். (அவர் கேம்ப்ரிட்ஜில் அரவிந்தருடன் படித்தவரும் கூட.) அரவிந்தருக்காக வாதாடிய சித்தரஞ்சன் தாஸுக்கு மாபெரும் வெற்றி!

(சித்தரஞ்சன் தாஸ், அப்போதிருந்தே அரவிந்தரின் ஆன்மிகக் கருத்துகளால் ஈர்க்கப்பட்டவர். 1923, ஜூன் மாதம் பாண்டிச்சேரிக்கு வந்து அரவிந்தரைப் பார்த்தார். ' நிலையற்ற வாழ்வின் அர்த்தமென்ன?' என்ற கேள்விக்கு பதில் வேண்டி, அவர் மனம் அரவிந்தரின் தத்துவங்களில் புகலடைந்தது. தாஸ் சுதந்திரப் போரில் ஈடுபட்டுப் பல சிறைவாசங்களை அனுபவித்தவர். சிறைவாசத்தின் கடுமை காரணமாக உடல் நலிந்திருந்தது. முழுமையாக அரவிந்த தத்துவங்களில் தோய்ந்திருந்த அவர், 1925 ஜூன் 26ல் காலமானார். அரவிந்தரின் சகோதரரான பரீன் கோஷ், மரண தண்டனை பெற்றார். பின் கருணை மனுச் செய்து, அது ஆயுள் தண்டனையாகியது. அந்தமான் சிறையில் பத்தாண்டுகள் ஆயுள் தண்டனையை அனுபவித்தார். 1920ன் ஆரம்பத்தில் விடுதலையானார். பிறகு அரவிந்தரின் தத்துவங்களில் புகலடைந்தார்.)

அரவிந்தர் விடுதலையான பின், மே 30ம் நாள் உத்தர்பாராவிலிருந்த தர்ம ரட்சணி சபையில் பேச அவருக்கு அழைப்பு வந்தது. அமரேந்திர சட்டர்ஜி அழைத்துச் செல்ல, அவர் ரயில் மூலம் உத்தர்பாராவுக்குச் சென்றார். ஸ்ரீ அரவிந்தர் ஒருவர் தான் பேச்சாளர். சுமார் பத்தாயிரம் பேர் கூடியிருந்தனர். அரவிந்தருக்குப் பெரும் குரல் இல்லை. அமைதியாக, நிதானமாக, தெளிவாக கணீரென்று பேசினார். அவரது சிறை அனுபவங்களை தெய்வம் பேசுவதாகவே கருதி, மக்கள் ஆடாமல் அசையாமல் சித்திரப் பாவை போல் அமர்ந்து கேட்டனர். வேத நெறிகளின் நேரடி நிரூபணமாக அவர்கள் ஸ்ரீஅரவிந்தரை தரிசித்தனர். கண்ணனைக் கண்டதைத் தம் உள்மனக் காட்சி என அரவிந்தர் கூறவில்லை. ' நிதரிசனமாக நேருக்கு நேர் சக மனிதரைக் காண்பதுபோல் கண்ணனைக் கண்டேன்' என்று உறுதிபடக் கூறினார். அந்த சத்திய வாசகத்தைக் கேட்டு மக்கள் வியப்பிலும் பக்தியிலும் ஆழ்ந்தனர்.

குறுகிய காலத்திலேயே சகோதரி நிவேதிதை மூலமாக, அவருக்கு ஒரு ரகசியச் செய்தி வந்தது. 'புரட்சிகரமான எழுத்துக்காகவும் பேச்சுக்காகவும் அரவிந்தர் விரைவில் நாடு கடத்தப்படலாம்!' என்பது தான் அது. இப்போது என்ன செய்வது?

(அமுதம் பெருகும்)

# மச்சி

"உலகத்துலே காதலிக்காதவங்க கூட இருக்கலாம். ஆனால் நண்பர்கள் இல்லாதவங்கன்னு யாரும் இல்லே" என்று வசனம் பேசுகிறார் படத்தின் நாயகன் துஷ்யந்த் (சிவாஜியின் பேரன்). இப்படியொரு சோக வசனம் பேச வேண்டிய சூழ்நிலை இவருக்கு ஏன் ஏற்பட்டது? அதுதான் கதையே!

ஒரே ஒருகணம் தலை தூக்கும் உணர்ச்சிக் கொந்தளிப்பான முன் கோபத்தால், வில்லனின் மகன் மீது கை வைத்து விடுகிறார்கள், நாயகனின் உயிர் நண்பர்கள். விடாது கருப்பு போல, துரத்திக் கொண்டு வரும் வில்லனை அழித்து, நண்பர்களை டாக்டர்களாக்குகிறார். மருத்துவம் படிக்க வந்த இடத்தில்தான் இந்த இளமை ரௌத்திரம்.

கதை என்னவோ கடுகளவுதான். அதை யதார்த்தமான காட்சி அமைப்புகளோடு, விறுவிறுப்பான திரைக்கதையில் சொல்ல முயன்று, ஓரளவு வெற்றி பெற்று விடுகிறார் அறிமுக இயக்குனர் கே.எஸ். வசந்தகுமார். ஆனால் இரண்டாவது பாதி திரைக்கதையில், நண்பர்களை வில்லன் கடத்துவதும், நாயகன் கோபத்தோடு போய் "உசுர காப்பாத்துற டாக்டர் தொழில் படிக்க வந்திருக்கோம். எங்களைக் கொலைகாரனா ஆக்கிடாதே" என்று கையை ஓங்கி டயலாக் பேசி விட்டுத் தப்பி வருவது, மீண்டும் நண்பர்களை வில்லன் கடத்துவது என்று எலாஸ்டிக் மாதிரி இழுத்தடிக்கிறார்கள். இருப்பினும் யதார்த்தமான செண்டிமெண்டுகளைக் கையாள, மெகா பட்ஜெட்டோ, தொழில் நுட்பமோ தேவையில்லை என்பதை நிரூபித்திருக்கும் இயக்குனர் பாராட்டுக்குரியவர்.

வில்லன் பசுபதியின் காட்டுக் கத்தல், அவரது மிகையான நடிப்பு, சண்டைக் காட்சிகள், எல்லாம் வியாபார சினிமாவின் வழக்கமான மிகைப்படுத்தல்கள். அறிமுகப் படத்தைக் காட்டிலும் பல மடங்கு பிரமாதப் படுத்திவிடும் துஷ்யந்த், தாத்தாவின் பெயரை ஓரளவு காப்பாற்றி விடுகிறார். அறிமுக நாயகி சுபா புஞ்சாவும் அஞ்சாமல் அசத்தி விடுகிறார்.

'மச்சி'யில் பரிதாபமாக உச்சுக் கொட்ட வைக்கும் பிக்கஸ்ட் ஃபெயிலியர் யாரென்றால், ஏ.ஆர். ரைஹானா. சந்தேகமே இல்லாமல் ரகுமானின் தங்கைதான் படத்திற்கு இசை. இரைச்சல் பாதி, பழக பாதி என்று இம்சையான கம்போசிங். இந்தக் குறைகளைத் தாண்டி, 'அட! படம் நல்லாயிருக்கே' என்று தியேட்டரை விட்டு வெளியே வரும்போது உணர வைத்து விடுவதுதான் இயக்குனரின் வெற்றி.

· விஸ்வநாதன்

● அபல் ஆவரெஜ்



# மாடர்ன் மனீஷாஸ்! ஹோம்லி குலவிளக்கு!



**பூத் கடல்!**

"**க**ழுத கெட்டா குட்டிச்சுவரு!
கேம்பஸ்ல இல்லாட்டி ஸ்பென்சர்ல பீச்சுரு!" - என்ற பூத் குறளின் தாமப்படி ஸ்பென்சரில் உதயமானோம்.

நம்ம 'பூத் கடல்'க்கு முதல் போணி - அட ஃபாரின் பாப்கார்ன்கள் - கேத்ரின், மரியா, டோனா. அமெரிக்காவின் டெக்ஸாஸில் ஃபேஷன் டிசைனிங் படிக்கும் மூவரும் ஆங்கிலத்தில் படபடத்தார்கள். "இந்தியா புடிச்சிருக்கு. ஆனா இன்னும் நிறைய முன்னேற வேண்டியதிருக்கு. இந்தியாவில இளைஞர்கள் அழகா இருக்காங்க. (தாங்க்ஸ்... ரொம்ப தாங்க்ஸ்) இந்த பிளாசா நல்லா இருக்கு. இங்க ஷாப்பிங் பண்ண பிடிச்சிருக்கு" என்றவர்களிடம், "இந்திய சினிமாவில் உங்களுக்கு யாரைத் தெரியும்?" என்றோம். "சில படங்கள் பார்த்திருக்கோம். ஒருத்தர் அழகா, ஸ்மார்ட்டா, மீசையோட இருக்காரு. அவரைப் பிடிச்சது. பெயர் தெரியலை" (ஆகா... யாருப்பா அந்தப் புண்ணியவான்?)

"அமெரிக்காவில காதல் எப்படி" என்றோம்.

"காதல் ரொம்ப வேடிக்கையானது. அதுக்கு மேல என்ன சொல்ல" (வேண்டாங்க... சொல்லிறாதீங்க காதலின் மகத்துவமே 'மக்கர்' ஆயிடும்)

அமெரிக்கன் ப்யூட்டிஸ்"க்கு ஆசையா கைய அசைச்சிட்டு (அதாங்க டாட்டா) நம்ம சென்னை மச்சான்ஸ் சுரேஷ், பிரபுகிட்ட 'லோலாய்' பண்ண ஆரம்பிச்சோம்.

"சென்னையில பார்க்கிற காதல் ஜோடிகள்ல உண்மையானவங்க 6%. எல்லோரும் ஏமாத்துறாங்க" என்று காதலர்களைக் கவிழ்த்த பிரபுவை சுரேஷ் 'கிராஸ்'ஸார். "அதெல்லாம் இல்லீங்க... 20% உண்மையானவங்க இருக்காங்க. ஆனா ஏமாத்துறதுல ஆண்களை விட பெண்கள் அதிகமாயிட்டாங்க" (லேடீஸ் குலங்கள் கவனத்திற்கு!)

"பட்ஜெட் வருது... உங்க 'தாட்' என்ன?" கேட்டோம்.

"ஏற்கெனவே பெட்ரோல் பாம் போட்டுட்டாங்க. இனி என்னென்ன பாம் போடப் போறாங்களோ" என பொருளாதாரத்தில் அக்கறை(!) காட்டினார்.

"தமிழ்நாட்டில் சிறந்த எதிரிகள்? சிறந்த ஜோடி யார்?" என்றதற்கு, "சந்தேகமேயில்லாம சிறந்த சண்டைக் கோழிகள் கலைஞர் - ஜெ.தான். டாப் ஜோடி சூர்யா - ஜோதிகாதான். போகப் போக எப்படின்னுதான் தெரியலை" என்று சிக்ஸர் அடித்தவர்களை, 'உங்க கல்யாணக் கனவு எப்படி?" என செக் வைத்தோம்.

"மாடர்ன் மனிஷாக்களை செட் அடிப்போம். ஆனா, கல்யாணம்னா ஹோம்லி குலவிளக்குத் தான் தேடுவோம்" என பௌன்சர் போட்டவர்களுக்கு, "அப்படின்னா ஸ்பென்சருக்கு வந்து ஜூட் விடறது வேஸ்ட்" என ஒரு யார்க்கர் போட்டு விட்டு வெளியேறுக்குத் திரும்பினோம்.



📷 + ✍ முகில்

**தூள் 'க்ளிக்'!**

நான் சேரன் காலத்திலும் ஹீரோ! என் பேரன் காலத்திலும் ஹீரோ!

அடங்க மாட்டேங்கறாரே...

📷 முகில்

• மன்மதன் கேசட் வெளியீட்டு விழாவில் விஜய டி.ஆர்., சிம்பு

வாசகர்களும் தாங்கள் எடுத்த தூள் க்ளிக்குகளை சென்னை ஸ்கேனுக்கு அனுப்பலாம்! தூள் - ஆ இருந்தா துட்டு உண்டுங்கோ!



## போஸ்ட் கார்டு POLL

கோட்டூர்புரத்தில் தலைமைச் செயலகம் கட்டுவதென்பது...

- வீண் செலவு
- மேலும் இடைஞ்சல்
- நல்ல திட்டம்

இந்த மூணுல உங்க சாய்ஸை போஸ்ட் கார்டுல தட்டி விடுங்க... ரிசல்ட் அடுத்த வாரம்.

முகவரி :
போஸ்ட் கார்ட் Poll,
சென்னை ஸ்கேன்,
47-ஏ, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காட்டுதாங்கல், சென்னை - 600 097

### சென்ற வார Poll ரிசல்ட்

ஒலிம்பிக்கில் இந்தியாவின் பதக்கக் கனவை பூர்த்தி செய்யப் போவது...




Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / PMG (CCN) 572 / 03 - 05* Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 358 / 03 - 05 *
Registered as a Newspaper in Sri Lanka Supplement to the Kalki issue Dated 11.7.2004

# திடீர்ப் பரிசுப் போட்டி - 2



படம் : இரா. சண்முகசுந்தரம்

இந்தப் படத்துக்குப் பொருத்தமான, புதுக் கவிதை ஒன்றை பத்து வரிக்குள் எழுதித் தட்டிவிடுங்க! அசத்தலான கவிதைக்கு ரூ.200/- பரிசு! பிரசுரமாகும் மற்ற கவிதைகளுக்கும் பரிசு உண்டு.

கடைசித் தேதி 19.7.2004. ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

'திடீர் போட்டி - 2' என்று குறிப்பிட்டு 'கல்கி' முகவரிக்கு அனுப்பவும்.

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / PMG (CCR) 572 / 03 - 05*
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 358 / 03 - 05 * Registered as a Newspaper in Srilanka

ஆடிக் காத்து!
அதிர்ஷ்டக் காத்து!!




பட்டுப்புடவைகள் | பேன்ஸி சேலைகள்
சர்ட்டிங் | சூட்டிங் | ரெடிமேட்ஸ்
டிரெஸ் மெட்டீரியல்ஸ் | மேட்சிங் ரகங்கள்
கைத்தறி | ஃபர்னிஷிங்



தி சென்னை சில்க்ஸ்™
தமிழகத்தின் மாபெரும் ஜவுளி சாம்ராஜ்யம்

23, உஸ்மான் ரோடு, தி. நகர், சென்னை - 17 . ✆: 24310888
558 - 560, ஒப்பணக்கார வீதி, கோயமுத்தூர் - 1. ✆: 2391555
74, புது மார்க்கெட் வீதி, திருப்பூர் - 4. ✆: 2242888
85- A, R.K.V. ரோடு, ஈரோடு - 1. ✆: 2213270






Shop online at www.thechennaisilks.com